உ

குருபரன் றுணை.

சர்வபிரயாண

# சகுனசாஸ்திரம்.

இந்நூலில்

இல்லறத்திற் குரிய

சகல முகூர்த்தங்களும்,

அடங்கியிருக்கின்றது.

இஃது

சிறுமணவூர்

## முனிசாமி முதலியா

ரவர்களால்

பல சாஸ்திரங்களைக்கொண்டு இயற்றப்பட்டு

தமது

சென்னை, சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.



1902.

இதன் விலை அணா 4.



உ

தெய்வமேதுணை.

சர்வபிரயாண

# சகுனசாஸ்திரம்.

இந்நூலில்,
இல்லறத்திற்குரிய
சகல முகூர்த்தங்களும்
அடங்கியிருக்கின்றது.

இஃது,
சிறுமணவூர்

## முனிசாமிமுதலியார்

அவர்களால்
பலசாஸ்திரங்களைக்கொண்டு
இயற்றப்பட்டு,

தமது
சென்னை சூளை,
சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

1905.



இதன் விலை அணா 4.

எமது அச்சுக்கூடத்தில் விற்பனைக்குத்தயாராயிருக்கும்

# புத்தக விளம்பரம்.

| | | | |
|---|---|---|---|
| இராமாயணம் கிளேஸ் 2-வாலியம் ஒஸ்திபதிப்பு | 4 | 0 | 0 |
| சாதாரண பாரதம் 4-வாலியம் | 4 | 0 | 0 |
| இந்தலா [அச்சிலிருக்கிறது] | 4 | 0 | 0 |
| சோதிடசிகாமணி ஒஸ்திபதிப்பு | 3 | 8 | 0 |
| இங்கிலீஷ், தமிழ் வைத்தியசிகாமணி ஒஸ்திபதிப்பு | 3 | 0 | 0 |
| இந்தியன் பீனல்கோட் ராயல் ஒஸ்திபதிப்பு | 3 | 0 | 0 |
| கிராம முனிசிப்கோர்ட் ராயல் கிளேஸ் | 3 | 0 | 0 |
| கிரிமினல்கோர்ட் சட்டம் [அச்சிலிருக்கிறது] | 2 | 0 | 0 |
| பிரபஞ்சவுற்பத்தி ஒஸ்திபதிப்பு | 2 | 0 | 0 |
| சாதாரண இராமாயணம் | 1 | 8 | 0 |
| உலகவிசித்திரக்கதை ஒஸ்திபதிப்பு | 1 | 0 | 0 |
| விக்கிரமாதித்தன் கதை கிளேஸ் | 1 | 0 | 0 |
| பதிவிரதைகள் சரித்திரம் | 0 | 12 | 0 |
| விராடபர்வம் ராயல் 8-பேஜ் லெத்தோபடத்துடன் | 0 | 12 | 0 |
| பட்டணத்தார்புராணம் ராயல் 16-பேஜ் லெத்தோபட | 0 | 12 | 0 |
| பார்வதிபரணியமென்னும் விஷவைத்தியசிந்தாமணி | 0 | 12 | 0 |
| நஷ்டஜாதகம் கிளேஸ் | 0 | 8 | 0 |
| நவகண்ட ஆரூடம் கிளேஸ் | 0 | 8 | 0 |
| மூலிகைமர்மம் கிளேஸ் | 0 | 8 | 0 |
| திருத்தணிகைச் சன்னதிமுறை திக்கு | 0 | 8 | 0 |
| சரீரசாஸ்திரம் கிளேஸ் | 0 | 8 | 0 |
| சிவவாக்கியம் 1000-ம்பாடல்கள் கிளேஸ் | 0 | 8 | 0 |
| மனமோகனக்கண்ணாடி கிளேஸ் | 0 | 8 | 0 |
| ஜெகத்ரக்ஷா கிளேஸ் | 0 | 8 | 0 |
| புலவுநூல் இந்தியா சமையல்சாஸ்திரம் கிளேஸ் | 0 | 8 | 0 |
| கண்கட்டுவித்தை | 0 | 6 | 0 |
| ஷை 2-ம் பாகம் | 0 | 6 | 0 |
| சகாதேவர் சோ[illegible]ாடி | 0 | 6 | 0 |
| திருநேத்திரசிந்[illegible]ணி | 0 | 5 | 0 |
| பெண்கள் ருது[illegible]னஜாதகம் | 0 | 4 | 0 |
| சர்வபிரயாண சகு[illegible]ஸ்திரம் | 0 | 4 | 0 |
| அகடவிகட சம்சாரி | 0 | 4 | 0 |
| வாந்திபேதி நிவார[illegible] | 0 | 2 | 0 |
| சுருக்குபஞ்சபட்சி | 0 | 2 | 0 |
| சைவானுஷ்டானவி[illegible] | 0 | 2 | 0 |
| அவிவேகபூரணகுருக[illegible]தை | 0 | 1 | 6 |
| விபூதி ருத்திராட்ச [illegible]கத்[illegible]வம் | 0 | 1 | 3 |

இப்படிக்கு,

சி[illegible]வூர்-முனிசாமி முதலியார்,

நெ. 12. சட்டண்ணை நாயக்கன் வீதி,

ரூலே போஸ்டு, மதிராஸ்.

உ

சிவராமஜெயம்.

# சர்வபிரயாண

# சகுனசாஸ்திரம்.

## பொதுப்பிரயாண சகுனம்.

பொதுப்பிரயாணமென்பது கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு இந்த நான்குதிசையைக்குறித்து சொல்லியதென்றறிக.

### விருத்தம்.

திங்களொடு சனியிரண்டுங் கிழக்கேயாகா
தெற்குமுகம் போகவென்றால் வியாழமாகா
அங்ஙனமே வடக்குமுகம் பிரயாணந்தான்
அப்பனே செவ்வாயும் புதனுமாகா
தங்கிநின்ற யிடமிருந்து மேற்கேபோகத்
தையலற்கும் புருடருக்கும் வெள்ளியாகா
இங்கிவைகள் சிவனார்கைச் சூலமாகும்
ஏற்கநாள் போகவென்றால் சூட்சங்கேளே.

### இதன்பொருள்.

| | |
|---|---|
| திங்கள் சனி | கிழக்கு |
| செவ்வாய் புதன் | வடக்கு |
| வியாழம் | தெற்கு |
| வெள்ளி ஞாயிறு | மேற்கு |

மேற்கூறிய அந்தந்த வாரங்களின் நேரே காட்டியிருக்கும் திக்குகளில் சிவனார்கைசூலம் நிற்கின்றமையால் அந்த வாரங்களில் அந்த திக்குகளில் பிரயாணம் முதலிய யாதொரு யாத்திரையுஞ் செய்யக்கூடாது அப்படி பிரயாணஞ் செய்யக்கூடாத நாட்களில் அவசியமாய் செல்லும்படியான காரியமாயிருக்கும்பட்சத்

தில் வீமேசுர உள்ளமுடையா னவர்களாற் கூறிய வார அமிர்த யோகக் கடிகையை அடியிற் கூறுவோமாக.

## வெண்பா.

வடக்குதயம் சென்றதுகால் வாழ்கிழக்கோடுச்சி
அடுக்குநமன் றிசைக்கோ டந்தி—குடகீழ்
நடுராவிற் சென்றக்கால் நாள்பார்க்கவேண்டாங்காண்
வடுவில்லாதென்றே மகிழ்.

## இதன் பொருள்.

செவ்வாய், புதன், இந்தவாரங்களில் வடக்கே போகும்படிநேரிட்டால்சூரியஉதயமான கால்நாழிகைக் கழித்து அதாவது-15-விநாடிசென்றபின்-5-விநாடிக்குள்ளாகவும். திங்கள், சனி, இந்தவாரங்களில் கிழக்கே போகவேண்டுமானால் சூரியன் நமது சிரசுக்குநேராக உச்சியில்வந்திருக்கும்போது அதாவது பகல்-15-நாழிகைக்கும். வெள்ளி, ஞாயிரு இந்த வாரங்களில் மேற்கே போகும்படி நேரிட்டால் அன்றிரவு-15-நாழிகைக்கு பிரயாணம்நேமித்து செல்லவேண்டும் அப்போது அடுத்த இடங்களில் பரஸ்தலசயனம்செய்திருந்து புறப்படவேண்டியது.

வியாழக்கிழமையில் தெற்கே போகும்படி நேரிட்டால் சூரியபகவான் அஸ்மானகிரியில் பிரவேசிக்கும்போது, அதாவது மாலையில் அஸ்தமிக்க ஒருநாழிகை முந்தியபொழுதில் புறப்படவேண்டியது. மேற்குறித்தபடியே அவ்வவ்வாரங்களுக்குரிய அமிர்தயோகக்கடிகையில் பிரயாணப்படுவோர்களுக்குஅந்தவாரங்களின் தோஷம் யாதொரன்றும் செய்யாது வாரசூலையபார்க்கவேண்டிய அவசியமில்லை.

---

## குறிப்பு.

முன்கூறிய வீமேசுர உள்ளமுடையனவர் வாரசூலையின் நாழிகையை ஏற்றுக்கொள்ளாமல் அந்தந்த வாரங்களுக்குரிய அமிர்தயோகக் கடிகையைமாத்திரம் குறித்து தோஷமில்லாத பிரயாணம் செய்யக்கடவரென்று லோகோபகாரமாய் திருவாய் மலர்ந்தருளினர். ஆகிலும் மேற்கூறியபிரயாணங்கள் சிலவாரங்களில் அகாலப்பிரயாணமா யிருக்கின்றமையால் சகாதேவர் வாக்கியத்தை இங்ஙனஞ் சேர்க்கப்பட்டிருக்கிறது.

## சகாதேவர் வாக்கு.

புலியும், பசுவும், ஓர் துறையில் நீரருந்தவும் தருமதேவதை நான்குபாதங்களில்நடக்கவும் சத்தியந்தவராதுசகலசாம்பிராச்யத்துடன் அரசாண்டிருந்த தமது இராச்சியபாரத்தை சூதினால் கவர்ந்த வஞ்சகநெஞ்சும், அரவக்கொடியும் நூற்றொருசகோதரரையுமுடையவனும், முதியோரையிகழ்ச்சிறும் கொடியோனுமாகிய துரியனுக்கும், தருமருக்கும், நேர்ந்தயுத்தத்தில் தனது தமயன்மார்களென்றும், துரியோதனாதியரைச்சத்துருவென்றும், பாராமல்சத்தியத்திற்குட்பட்டு துரியன் கேட்டபடியே யுத்தத்தில் வெற்றிபெரும்படி நாளும் நட்சத்திரமும் அமைத்துக்கொடுத்த நடுநிலைநாடிய புண்ணியமூர்த்தியாகிய சகாதேவர் சொல்லுகிறார். வாரசூலையென்றால் நாள்முழுதும் ஒரேதிக்கில் நிற்பதில்லை. சங்கரமூர்த்தியின் கரத்திலுள்ள சூலத்தை, பூமியில்வைக்குங்காலமும், மறுபடியும் கரத்தில் தரிக்குங்காலமும், உண்டாகையால் பூமியில் நிறுத்தும் காலத்தில் மாத்திரம் அந்ததிசையில் பிரயாணம் செய்யக்கூடாது. அதாவது,

### வாரசூலை.

திங்களும் சனியுமிந்திரன் றிசையிலோ ரெட்டதாகும்
பொங்குபொன் னிருபான்றெற்கு புகர்கதிர் மேற்கீருராம்
தங்குசேய் வடக்கீருராஞ் சார்புத னதிவீரெட்டுச்
சங்கரன் கையிற்சூலம் தரணியில் வைக்குங்கண்டீர்.

### இதன்பொருள்.

| | |
|---|---|
| திங்கள், சனி, | கிழக்கில் 8-நாழிகையும் |
| வியாழம், | தெற்கில் 20-நாழிகையும் |
| வெள்ளி, ஞாயிறு | மேற்கில் 12-நாழிகையும் |
| செவ்வாய் | வடக்கில் 12-நாழிகையும் |
| புதன் | வடக்கில் 16-நாழிகையும் |

ருத்திரமூர்த்தியின் சூலம் பூமியில் இருக்குமாகையால் மேற்கண்ட நாழிகைக்குமேல் அந்தந்த திசைகளில் பிரயாணம் செய்தால் சூலைதோஷம் இல்லையென்றறிக.



## சூலபரிகாரம்.

சூலத்திசையிற் சொற்பயணம் போகவெனில்
சீலத்துடனுண்டு செல்வடக்குப்—பாலாம்
தயிர்கிழக்குத் தெற்குத் தைலமாம் மேற்குச்
செயிர்தீய்ந்த வெல்லமெனச் செப்பு.

## இதன் பொருள்.

மேற்குரித்த வாரங்கள் யேழிற்கும் கண்டிருக்கிறநாழிகைக் கழித்து அதற்குமேற் பிரயாணம் செய்வது உத்தமம் அவ்வளவு நாழிகைக்கூட தரிக்க இடமின்மையான அவசரம் நேரிட்டால் ஸ்நானபானம்செய்து பரிசுத்தமாக பசும்பாலும் அன்னமும் புசித்து, வடக்குமுகமும், தயிர்சேர்ந்த அன்னம்புசித்து, கிழக்குமுகமும், எள்ளெண்ணெ சேர்ந்த அன்னம் புசித்துத், தெற்குமுகமும் தீஞ்சுவையாகிய வெல்லம் சேர்ந்த அன்னம்புசித்து, மேற்குமுகமும், பிரயாணம் செய்யவேண்டியது. மற்ற அறுசுவை கூடாவண்ணம் மேற்குரித்தபடி தனித்தனி வஸ்துவால் புசித்தேகுதல் நலமாம் தோஷமில்லை யென்றறிக.

## திதிசூலம்.

| | |
|---|---|
| பிரதமை, நவமி | கிழக்கு |
| துதியை, சப்தமி | தென்கிழக்கு |
| யேகாதசி | தெற்கு |
| சதுர்த்தி, துவாதசி | தென்மேற்கு |
| சஷ்டி, அமாவாசி | மேற்கு |
| சப்தமி, பௌர்ணமி | வடமேற்கு |
| அஷ்டமி, சதுர்த்தசி | வடக்கு |
| பஞ்சமி, திரயோதசி | வடகிழக்கு |

இந்த திதிகளிற் கண்ட திக்குகளில் சூலம் நிற்குமாகையால் எந்தத்திக்கில் பிரயாணம்செய்யநேரிடுகிறதோ அன்றயதினம்சூலத்திற்குடைய திதியைத்தள்ளி மற்றதிதிகளில் பிரயாணம்செய்யில் சூலதோஷமில்லை.



## நட்சத்திர சூலம்.

| | |
|---|---|
| அவிட்டம், கேட்டை | கிழக்கு |
| அஸ்வனி, திருவோணம் | தெற்கு |
| பூசம், ரோகணி | மேற்கு |
| உத்திரம், அஸ்தம் | வடக்கு |

இந்த நட்சத்திரங்கள்வருகிறதினத்தில் அதற்குடையதிக்கில் பிரயாணம் செய்யக்கூடாது.

---

{ யாத்திரை போகவும், கெற்பதானம் செய்யவும், மனைகோலவும், ஆகாதநாட்கள். }

| காலற்ற நட்சத்திரம். | உடலற்ற நட்சத்திரம். | தலையற்ற நட்சத்திரம். |
|---|---|---|
| கார்த்தி | மிருகசீரிடம் | புனர்பூசம் |
| உத்திரம் | சித்திரை | விசாகம் |
| உத்திராடம் | அவிட்டம் | பூரட்டாதி |
| ஆ ௩. | ஆ ௩. | ஆ ௩. |

### கவி.

காலற்றன உடலற்றன தலையற்றன நாளில்
கோலக்குழன் மடவார்தமைகூடின்மலடாவார்
மாலுக்கொருமணிமாளிகை கோலின் அதுபாழாம்
ஞாலத்தவர் வழிபோயினு நலமெய்திலராமே.

### இதன்பொருள்.

முதற்கலத்திற்கண்ட மூன்று நட்சத்திரமும் காலற்றவைகள் இரண்டாவது கலத்திற்கண்டமூன்றுநட்சத்திரமும் உடலற்றவைகள், மூன்றாவது கலத்திற்கண்ட நட்சத்திரங்கள்மூன்றும் தலையற்றவைகள், ஆகையால் நூதனமாய் மனைகோலவும் வீடுகட்டவும் ஆகாது அப்படி கவனிக்காமல்கட்டினால் அம்மனை பாழாய்விடும் கெற்பதானம் அல்லது நிஷேகமுகூர்த்தம் செய்யக்கூடாது அப்படிசெய்யில் அம்மாது புத்திரரின்றி மலடாவாள் யாத்திரைமுதலிய தூரப்பிரயாணங்கள் செய்யக்கூடாது அப்படிசென்றால் அக்காரியங் கெடுதலாவதன்றிபிரயாணஞ்செய்பவருக்கும் ஆபத்தாம்.

## யாத்திரை போகவும், கடன்கொடுக்கவும், ஆகாத நாட்கள்.

ஆதிரை பரணிகார்த்திகை யாயிலியமு பூரங்கேட்டை
தீதுருவிசாகஞ்சோதி சித்திரைமகமீராறும்
மாதனங்கொண்டார்தாரார் வழிநடைப்போனார்மீளார்
பாய்தனிற்படுத்தார்தேரார் பாம்பின்வாய்த்தேரையாமே.

### இதன் பொருள்.

திருவாதிரை, பரணி, கிருத்திகை, ஆயிலியம், பூரம், பூராடம், பூரட்டாதி, விசாகம், சோதி, சித்திரை, மகம், கேட்டை, இந்த-12-நட்சத்திரங்களும் கொடியதாகையால் இந்த நட்சத்திரம் வரும்நாட்களில் கடன்கொடுத்தாலும், வியாதியென்கிறசந்தேகங் கொண்டு பாயிற்படுத்தாலும், ஊர்பயணம்சென்றாலும், மீளமாட்டார்கள். பாம்பின்வாய்த் தேரைப்போல் மரணமாவார்களென்றவாறு.

---

யாத்திரைமுதலிய சகல காரியத்திற்கும்
பிரயாணப் படும்போது
உத்தமமாகிய

## சுபசகுனங்கள்.

மஞ்சளுங்குடைவெண்சாதம் மலர்ச்சரந்தீபஞ்சங்கு
வஞ்சிமங்கிலியமாது வண்டுபொன்விசிரிவளையல்
கொஞ்சியகிளியும்மானுங் கெருடனுங்கரும்புந்தேனும்
மிஞ்சிநீநடக்கலிம்மா ரெதிற்படமிகநன்றாமே.

### இதன் பொருள்.

மஞ்சள்குடை வெண்சாதம் புஷ்பம் தீபம் சங்குமங்கிலியப்பெண் வண்டுபொன்விசிரிவளையல் கிளிமான் கெருடன் கரும்புதேன் இவைகள்சுபசகுனம். கெருடன் வட்டமிட்டாலும்எதிராகவந்தாலும் அல்லது பிரயாணப்படும்போது குரலோசைக்கேட்டாலும் மிகநன்றாம்.

பாலொடுபழமுஞ்சாணம் பசுவிளநீறுகன்னி
நாலணிபிரட்டைப்பார்ப்பார் பல்லக்குநீர்க்குடங்கள்

மாலெரளிர் ரசக்கண்ணடி மாவிலைபெருவின்கூட்டைச்
சர்லவிச்சகுனமெல்லாம் சான்றவர்சுகமென்றரே.

இதன்பொருள்.

பால்-பழம்-சாணம்-பசு-இளநீர்-கன்னி-இரட்டைப்பிராமணர்கள்-பல்லக்கு - நீர்க்குடம்- ரசம்பூசினகண்ணடி - மாவிலை-எருவுக்கூடை இவை சுபசகுணமெனப் பெரியோர் கூறுகிறர்.

வெண்ணெயுந்தயிரும்மோரும் வேசியுமழுக்குமூட்டை
மன்னர்சந்தனமும்பெட்டி மாதரின்கூட்டம்சங்கு
பொன்கொடிகுழந்தையேந்தி பொரிமயில்பரிமளங்கள்
இன்னவாரெதிரிற்கண்டு யேகெனப்பெரியோர்சொன்னர்.

இதன்பொருள்.

வெண்ணெ, தயிர், மோர், வேசி, வண்ணன், அழுக்குமூட்டை அரசர்கள், சந்தனம், பெட்டி, பெண்கள்கூட்டம், சங்கு, பொன், கொடி, குழந்தையேந்தினவர், பொரி, மயில், பரிமளவஸ்துகள் சுபம்.

மாமிசம்மிரச்சிவண்ணன் மலரதுமுடித்தமங்கை
காமனரிறந்தமாதம் கைம்மனையிருவர்யானை
சுவாமிதேர்திருவிழாக்கள் சர்ஜனர்பஜனைக்கூட்டம்
நாமிதைக்கண்டேபோக நல்லதென்றுரைத்தார்முன்னேர்.

இதன் பொருள்.

மாமிசம், இறைச்சி, வண்ணன், பூமுடித்தபெண், இரட்டை விதவைஸ்திரீகள், தேர்-திருவிழாக்கள் பஜனைக்கூட்டமும் சுபம்.

நடந்தவன்காலைச்சேர்ந்து நாயதுமுகர்ந்திட்டாலும்
தொடர்ந்தவன்முன்னலோடித் துரிதமாய்சென்றிட்டாலும்
அடர்ந்தவன்முகத்தைநோக்கி ஆவெனக்குலைத்திட்டாலும்
கடந்தவெப்பொருளானாலும் கைக்கூடுமென்றார்முன்னேர்

இதன் பொருள்.

பிரயாணப்படும்போது நாய்வந்து காலைமுகர்ந்தாலும் முன்னதாகவோடினாலும் முகத்தைப்பார்த்து குலைத்தாலும் மிக உத்தமமாம் ஆனல் அடித்துத் துரத்தின போதிலும்போகாமல் பெருங்குரலாய் குலைத்தால் பொருள்நஷ்டம் அபாண்டங்களும் ஆபத்துகளும் வருமாம் அந்தபிரயாணங் கூடாதவாம்.

தருவிளங்கன் றுநல்லத் தாமரைமலருஞ்சலமும்
விருந்துண்டுவருதல்வெண்சா மரைபலகாரம்நாற்று
வருதல்நன்றெனவேமுன்னோர்வரைந்தசொற்றமிழால்செய்தோன்
சிறுமணவூர்வேளாளச் சேய்முனிசாமிதானே.

இதன் பொருள்.

பூஞ்செடியின் கன்றுகள் தாமரைமலர்கள் ஜலம் விருந்து சாப்பிட்டு வருகிறகூட்டம் வெண்சாமரை பலகாரம்தான்னியமுதலான நாற்று கட்டுகள் வருதல் நல்லதென்று முன்னோர் கூறியவாக்கியங்களை பாடலாகச்செய்து அச்சிட்ட அன்பன் சிறுமணவூர்வேளாள வம்மிசத்திலுதித்த முனிசாமிமுதலியார் என்றறிவீர்.

## அவசகுனங்கள்.

வேசியின்புதல்வன்மொட்டை விரிதலையானபேர்கள்
ராசியின்வெளுத்தமூட்டை துணிந்தசொல்பகருங்கூட்டம்
வாசிகோடரியுங்கத்தி வகையிருப்பாயுதங்கள்
பேசியவிதுகளெல்லாம் பார்த்துநீநடக்கொணாதே.

இதன் பொருள்.

வேசியின்பிள்ளை மொட்டைத்தலையர் தலைவிரித்தும் ஆற்றியும்வருதல், சலவையானதுயில்மூட்டை சண்டையொடுவருகிறகூட்டம், வாசி, கோடரி, கத்தி, கெட்டப்பாறை, மண்வெட்டி, அரிவாள், உளி, இதுகளைப்பார்த்து நடக்கக்கூடாவாம்.

வீட்டுக்குதூரஸ்திரீயும் வேடனுமெண்ணெய்பானை
காட்டில்வாழ்குரங்கும்பாம்பு கண்தெரியாதபேரும்
ஆட்டினம்கழுதைப்பன்றி ஐயையோவென்றசத்தம்
கேட்டுநீநடந்தையாகில் கெடுதியாமென்றேசொன்னார்.

இதன் பொருள்.

வீடுதூரமானவள், வேடன், எண்ணெய்பானை, குரங்கு-பாம்பு குருடர்கள்-ஆடு-கழுதை-பன்றி-ஐயையோ வென்றசத்தமாகாது.

உப்பிலாவேனம்பஞ்சு வஸ்திரமும்கண்டபேர்கள்
கப்பியமுக்காடிட்டோர் கைதனில்நெருப்புள்ளோர்கள்
செப்பியகழற்கூத்தாடிக் குறவர்கள்வேஷக்காரர்
இப்படியெதிரிலாகா தென்றனர்பெரியோர்தானே.

இதன் பொருள்.

உப்பிலாதயேனம் பஞ்சுமூட்டை மூக்காடிட்டவர் நெருப்பு மோடிவித்தையாடுகிறவன் குறவர் பகல் வேஷக்காரர் ஆகாது.

கூனனும்காவிவேஷ்டிக் கொண்டவன்முடவன்றேகி
பானையிற்புதியபானை படைதொழிலாளிபாப்பான்
வீணனும்பேடியேணி விரகிடசுமையுந்தோலும்
காணவேபோனவேலை கஷ்டமாமென்றேசொன்னார்.

இதன் பொருள்.

கூனன், பண்டாரம், முடவன், நோயாளி, புதுப்பானை, யுத்தத்தொழில்காரன், ஒத்தைபாப்பான், பேடி, ஏணி, விறகுசுமை, ஆடு மாடுமுதலிய சரமம்வரில் ஆகாது.

ஒருகுரலமுகக்காடை யுடையிலான்தேசியென்று
வருபவன்கருமான்குயவன் வடச்சயர்யெருமைத்தும்பு
மருந்தளித்திடுவோனை வயித்தியன்குஷ்டரோகி
வருகையிலெதிர்சென்றக்கால் வருத்தமேவிளையுமென்றார்.

இதன் பொருள்.

ஒற்றைக்குரலழுகை, காடை, ஆடையில்லாதவன், பிச்சைக்காரன், கருமான், குயவன், வடக்கயர், எருமைக்கிடா, தும்பு, வயித்தியன், குஷ்டரோகிவரின் ஆகாது.

கொலைத்தொழிற்செய்யும்பேர்கள் கூந்தலில்லாதமாது
வலைதனைப்பிடித்தோன்சாணன் வணிகனும்வாளையேந்தி
குலைக்காமலெதிரில்நாய்கள் கூடினுங்குறுகிட்டாலும்
நிலைத்தவெத்தொழிலானாலு னீங்கிடுமென்றேசொன்னார்.

இதன் பொருள்.

கொலைத்தொழில் செய்கிறவன் கூந்தலில்லாதபெண் வலைவீசுகிறவன் சாணன், வாணியன், வாள்பிடித்தவன், நாய்குலைக்காமல் எதிர்ப்படுதல் அல்லது குறுக்கிடுதல் ஆகாது.



### வலதுபக்கமாக போகவேண்டிய பிராணிகளின்

## சகுனபலாபலன்.

பசுவொடுபுலியும்யானை பரிமளப்புனுகுபூனை
முசலொடுகோழிக்கள்ளிக் காக்கையுமந்திநாரை
விரையெனநம்பும்புள்ளி மான்சுபமாதுகொக்கு
நிஜமிதுவலமாய்வந்தால் நினைத்ததுஜெயமாங்கண்டாய்.

### இடதுபக்கமாக போகவேண்டிய பிராணிகளின்

## சகுனபலாபலன்.

காட்டில்வாழெருமைபன்றி கரடியுங்குரங்குமுஞ்சூர்
ஒட்டமாம்நாயும்பூனை உடும்பொடுகீரிப்பிள்ளை
ஆட்டினங்கிடாவுமட்டை அரியரெவரானாலும்
வாட்டமாமிடதுபக்கம் வந்திடில்மிகவுநன்றாம்.

நிலமதிற்றிசைகள்நான்கில் நேரிடும்பலன்களுக்கும்
வலமிடப்பலனுமெதிரில் வரும்பலனெவையுங்கோர்த்து
தலமதிற்சிறுமணவூரான் தகமைவேளாளனென்சீர்
குறுமுனிசாமிவாக்கால் கூறியபலந்தான்முடிவே.





## சர்ப்பசகுனம்.

இரண்டு பாம்புகள் சண்டைபிடிப்பதைப் பார்த்தால், சிநேகிதர்களிடத்தில் விரோதம் உண்டாகும். இரண்டு பாம்புகள் சேர்ந்து ஒரு பக்கமாய் ஓடிக்கொண்டிருந்தால் தரித்திரம் உண்டாகும் ஆண் பெண் சம்போகித்துக்கொண்டிருந்தால் சௌக்கியம். ஒரு பாம்பு மற்றொருபாம்பை விழுங்கிக்கொண்டிருக்கும்போது பார்த்தால், கருப்பு வரும். பச்சை மரத்தை ஏறிக்கொண்டிருக்கும் பாம்பை பார்த்தால் சக்கிரவர்த்தியாவான். மரத்தைவிட்டு கீழே நகர்ந்து வரும் பாம்பை ராஜாக்கள் பார்த்தால்கெடுதல், இதருள் பார்த்தால் மேன்மை. பாம்பு தன்வீட்டில்பிரவேசித்தால், தனலாபம். வீட்டிலிருந்து வெளியே போனால், தரித்திரம். படத்தையும் வாலையும் எடுத்துக்கொண்டு இடது பக்கத்திலிருந்து வலது பக்கத்திற்கு போனால், அதிக நல்லது. படத்தைமாத்திரம் எடுத்துக் கொண்டுபோனால், போஜனசௌக்கியம். தன்பேரில்வராமல்போனல் மேன்மை, தன் பக்கத்திலிருந்து தப்பித்துக்கொண்டு ஓடிப் போனால், தரித்திரம் வலது பக்கத்திலிருந்து எதிரில்வந்தால் காரியசித்தி. இடதுபக்கத்திலிருந்து வந்தால், கெடுதல். தான்போகும் வழியில்புரண்டுக்கொண்டிருப்பதைப்பார்த்தால் காரியசித்திதான் அந்த பிரயாணத்தை நிறுத்துவது கெடுதல், தன்னைப் பார்த்த போதே படத்தை எடுத்து ஆடினல், தன் சம்பத்துகள் உண்டாகும். தன்னை பார்த்தஉடனே புத்துக்கு ஓடிப்போனால், தரித்திரனுக்கு தனப்பிராப்தி, தனவான்களுக்கு தரித்திரம் பாம்பு செத்துவிழுந்திருந்தால் சாவுசமாச்சாரம் தெரியவரும். குடியானவன் போகும்போது அவனுடைய நிலத்தில் படத்தை எடுத்துக்கொண்டு ஆடிக்கொண்டிருந்தால் நிலம் நன்றாய் விளையும். அவனைப் பார்த்தவுடனே ஓடிப்போனால் விளையாது அவன் விரைவிரைக்கும்போது படத்தை யெடுத்து ஆடுவதை பார்த்தால், நன்றாய் விளையும், பாம்பு ஊருக்குள் பிரவேசித்தால், அந்தஊரில் வசிப்பவர்களுக்குநல்லது. ஊரைவிட்டு ஓடிப்போனால் அவர்களுக்குதரித்திரம். ஊரில் பிரவேசிக்கும்போது வலதுபக்கத்தில்பாம்பு இறைந்தால் நல்லது, இடது பக்கத்தில் இறைந்தால், கெடுதல். பாம்பு

இறைச்சலை கேட்டுக்கொண்டு ஊரில் பிரவேசிப்பது நல்லது. பிரயாணமாய்ப் போவது கெடுதல். பாம்புபோன ஜாடைகாணப்பட்டால், அந்த ஜாடையின்வழியாகவே பின்னுக்குப்பின் நடந்துக்கொண்டு தன் காலினல் அதுபோனவழியைதுடைத்துக்கொண்டு போகவேண்டியது,

## சகுந்தம், கருடப்பக்ஷி, பரத்வாஜம்,

சகுந்தம் கிழக்கில் காணப்பட்டால் கெடுதல். தென்கிழக்கில் கஷ்டம் தெற்கில் தனலாபம். தென்மேற்கில் வாகனலாபம். மேற்கில் தனம். வடமேற்கில் சுபம். வடக்கில் மரணம். வடகிழக்கில் துக்கம். வலதுபக்கம்காணப்பட்டால் ஆரோக்கியம். வலதுபக்கத்திலிருந்து இடதுபக்கம் போனல் சுபம். மத்தியில் நின்றிருந்தால் லாபம். இடது பக்கத்திலிருந்து வலது பக்கம் போனல் கெடுதல் பின்னிருந்தால் ஹானி.

கருடப்பக்ஷி இடது பக்கத்திலிருந்து வலது பக்கம்போனல் கஷ்டங்கள்சம்பவிக்கும். திரிந்துக்கொண்டிருந்தால்நல்லது. வலது பக்கத்திலிருந்து இடது பக்கம் போனல் தனதானிய சமிருத்தி ஆகாரத்தை கவ்விக்கொண்டு வலது பக்கத்திலிருந்து இடது பக்கம் போனல் விசேஷ லாபம். அது எந்த திக்கில் காணப்படுமோ அந்த திக்கில் அந்த திசைக்கு நல்லது. சகுந்தம், கருடப்பக்ஷி, நரி இந்தமூன்றும் சேர்ந்தாவது வேறுவேறு பக்கத்திலாவது காணப்பட்டால் நல்லது.

பரத்வாஜபக்ஷி குறுக்கே காணப்பட்டால்நல்லது ஆண்பக்ஷி வலது பக்கத்திலிருந்து இடது பக்கத்திற்குப்போனல் கஷ்டம், அப்படி பெண்பக்ஷிபோனல் சுபம். ஆணும் பெண்ணுமாக போனல் அதிக மேன்மை.

---

## காக்கை சகுனம்.

பிரயாணம் செய்யும்போது காக்கை கத்திக்கொண்டுநேராய் வந்தால், காரியம் விபலமாய் திரும்புவான். முதலில்இடது பக்கத்திலும் பின்பு வலது பக்கத்திலும் கத்தினல், வழி மத்தியில் திருடர்கள் அடிப்பார்கள். முதலில் வலது பக்கத்திலும் பின்பு இடது பக்கத்திலும் கத்தினல், தனலாபம் காரியசித்தி. இடது பக்கத்

தில் கத்தி பின்னால் வந்தால், தனலாபம். இடது பக்கத்தில் கத்தி எதிரில் வந்தால், வழி மத்தியில் தடைகள் உண்டாகும். பிரயாணி களாயில்லாதவர்களுக்கு இதுசுபசகுனம். எதிரில்வந்துக்கொண்டு கத்தி வலது பக்கமாய் முன்னேபோனால் ரணபாதை உண்டாகும்

நெற்றியின்பேரில் காக்கை வட்டம்போட்டால், காரியம் கலந்துவரும், நல்ல சாப்பாடு அகப்படும். குச்சியும் கட்டையும் மூக்கில் கடித்துக்கொண்டு இடதுபக்கத்திலிருந்து வலதுபக்கம் போனால் காரிய சித்தி, ஒரு காக்கை வாயில் மற்றொரு காக்கை ஆகாரத்தை போட்டுக்கொண்டிருக்கும்போதுபார்த்தால் சௌக்கியம் உண்டாகும்.



## காகங்கத்தல்.

எந்தவாரமானபோதிலும் பகல் முகூர்த்தம்
(8) க்கும் அடியில் வருமாறு
பலன் அறியவும்.

எவ்வித காரியங்களுக்குப் பிரயாணம் படும்போதாவது, அக் காரியங்களை யோசித்துப் பேசும்போதாவது. காகங்கத்துமாயின் அந்த நாழிகையை பங்கிட்டு எத்தனையாவது முகூர்த்தமோ அதற் குடைய பலனென்றறியவும்.

| | | |
|---|---|---|
| ௧-வது | முகூர்த்தம் | லாபம் |
| ௨-வது | முகூர்த்தம் | சேதம் |
| ௩-வது | முகூர்த்தம் | வருத்து |
| ௪-வது | முகூர்த்தம் | தனம் |
| ௫-வது | முகூர்த்தம் | மழை |
| ௬-வது | முகூர்த்தம் | யுத்தம் |
| ௭-வது | முகூர்த்தம் | மரணம் |
| ௮-வது | முகூர்த்தம் | அச்சம் |



## கழுதைகத்தல்.



தாம்கோரிய காரியங்களுக்குப் பிரயாணப் படும்போதாவது, இந்தகாரியத்தைக்குறித்து ஆலோசிக்கும்போதாவது, கழுதைகத்துமாயின் அந்ததிக்கை யின்னதென்று நிதானித்து அடியிற் கூறும் பலாபலனைத் தெரிந்துக்கொள்ளவும்.

| | |
|---|---|
| கிழக்கு | ஆலசியம் |
| தென்கிழக்கு | மரணம் |
| தெற்கு | தனலாபம் |
| தென்மேற்கு | சந்தோஷம் |
| மேற்கு | கலகம் |
| வடமேற்கு | அபாயம் |
| வடக்கு | விருந்து |
| வடகிழக்கு | பொல்லாங்கு |

இதன்றியில் தனக்கு முன்கத்தினாலும் படுக்கையை விட்டெழுந்தாலும் நினைத்துப்போகிறகாரியஞ் ஜெயமாகும்.





## ஆந்தைகத்தல்.

ஒருரையுரைக்குமாகி லுற்றதோர்சாவுசொல்லும்
ஈருரையுரைக்குமாகி லெண்ணியகருமநன்றும்



மூவுரையுரைக்குமாகில் மோகமாமங்கைசேர்வள்
நாலுரையுரைக்குமாகில் நாழிக்கலகஞ்சொல்லும்
ஐந்துரையுரைக்குமாகி லங்கொருபயணஞ்சொல்லும்
ஆறுரையுரைக்குமாகி லடுத்தவர்வரவுசொல்லும்
ஏழுரையுரைக்குமாகி லிறந்தபண்டங்கள்போகும்
எட்டுரையுரைக்குமாகில் திட்டெனச்சாவுசொல்லும்
ஒன்பதும்பத்துமாயி லுத்தமமிகவுநன்றே.

| | | |
|---|---|---|
| க | ஆகில் | மரணம் |
| உ | ஆகில் | காரியஞ்செயம் |
| ந | ஆகில் | ஸ்திரீவருத்து |
| ச | ஆகில் | கலகம் |
| ரு | ஆகில் | சினேகிதர் வரவு |
| சா | ஆகில் | மழையுண்டு |
| எ | ஆகில் | காரியங் கெடுதல் |
| அ | ஆகில் | சாவுண்டு |
| கூ | ஆகில் | காரியம் நன்று |

## கெவுளிசொல்லுக்குப் பலன்.

| | |
|---|---|
| மார்புக்குநேர் | கோபம் |
| வலதுமார்புக்குநேர் | லாபம் |
| இடதுமார்புக்குநேர் | துக்கம் |
| வலதுபுஜத்திற்குநேர் | பொருள் வரவு |
| இடதுபுஜத்திற்குநேர் | ஸ்திரீ வரவு |
| வலது தொப்பைக்குநேர் | சாவு |
| இடது தொப்பைக்குநேர் | சிநேகிதர் வரவு |
| முதுகுக்குநேர் | இடம்விட்டுப்போகுதல் |



## பல்லி விழுதலுக்குப் பலன்.

| | |
|---|---|
| சிரசில் | மரணம் |
| வலக்காதில் | நன்மை |
| நெற்றியில் | பட்டாபிஷேகம் |
| மூக்கில் | வியாதி |
| கழுத்தில் | சந்தோஷம் |
| மார்பில் | பிணி |
| இடக்கை | மரணம் |
| வலக்கை | பெரியசாவு |
| வயிற்றில் | குழந்தை |
| குறியில் | கேடு |
| முதுகில் | பெருநாசம் |
| அபானத்தில் | தனமுண்டு |
| தொடையில் | நோய் |
| முழங்காலில் | கலகம் |
| பாதங்களில் | பிணி |
| கால்விரல்களில் | நாசபயம் |
| இடக்கை விரல்களில் | ஸ்திரீ துயரம் |
| வலக்கை விரல் | ராஜபயம் |
| தேகத்தி லோடில் | தீர்க்காயுசு |

## பல்லி சொல்லுக்குப் பலாபலன்.

ஞாயிறு. கிழக்கு - பயம். தென்கிழக்கு - தீமை. தெற்கு-சுகம். தென்மேற்கு-பந்து தரிசனம். மேற்கு-சண்டை. வடமேற்கு-வஸ்திரலாபம். வடக்கு - தனலாபம். வடகிழக்கு - லாபம். ஆகாயம்-ஜெயம். பூமி-நினைத்த காரியம் ஆகாது.

திங்கள். கிழக்கு-தனலாபம். தென்கிழக்கு-கலகம். தெற்கு-பகை. தென்மேற்கு-விரோதம். மேற்கு-இராஜதரிசனம். வட

மேற்கு-அமங்கலம், வடக்கு-வஸ்திரலாபம். வடகிழக்கு-கலியாணம். ஆகாயம்-கேடு. பூமி-ஐஸ்வரியம்.

செவ்வாய். கிழக்கு சம்பத்து, தென்கிழக்கு பந்துலாபம், தெற்கு விசனம், தென்மேற்கு சத்துரு, மேற்கு அனுகூலம், வடமேற்கு தூரத்துசங்கதி, வடக்கு சத்துருபயம், வடகிழக்கு வாகனம், ஆகாயம் பிரயாணம், பூமி விசேஷ தனலாபம்.

புதன். கிழக்கு சந்தோஷம், தென்கிழக்கு திரவியலாபம் தெற்கு சரீரபீடை, தென்மேற்கு பந்து ஆனி, மேற்கு பயம், வடமேற்குதனநாசம், வடக்கு சுகம், வடகிழக்கு காரியமாகாது, ஆகாயம் நல்லசங்கதி, பூமி ஐஸ்வரியம்.

வியாழம். கிழக்கு அசுபம், தென்கிழக்கு பந்துசன்மானம், தெற்கு தனலாபம், தென்மேற்கு காரியசித்தி, மேற்கு நஷ்டம், வடமேற்கு நல்லவார்த்தை, வடக்குகாரியமாகாது, வடகிழக்குசவுக்கியம், ஆகாயம் கலகம், பூமி கலகம்.

வெள்ளி. கிழக்கு சுபவார்த்தை, தென்கிழக்கு அலங்காரம், தெற்குபந்துதரிசனம், தென்மேற்கு நல்லகேள்வி, மேற்கு சந்தோஷம், வடமேற்கு கலகம், வடக்கு கலகவார்த்தை, வடகிழக்குசத்துரு, ஆகாயம் வஸ்துலாபம், பூமி சூதகஸ்நாணம்.

சனி. கிழக்கு சுபவார்த்தை, தென்கிழக்கு தனலாபம், தெற்கு ராஜதரிசனம், தென்மேற்கு ரோகம், மேற்கு வஸ்திரலாபம், வடமேற்கு ஸ்திரீபோகம், வடக்கு பிரியசமாச்சாரம், வடகிழக்கு திருடர்பயம், ஆகாயம் காரியஆனி, பூமி காரியசித்தி.

## 16 திக்குக்கும் பல்லிகாதல்.

அருக்கன்மேற் பயநாசம் ரெண்டிற்சாவு
அகன்றவர்பின் மீண்டிடுவூர் மூன்றேயாகில்
உருக்கமுள்ளார் சாவதனைக் கேட்கநான்கு
ஒருசண்டை யுண்டாந்து உரவாராறு
விரிதலையு மழுகுரலு மழையுநோயு
மென்மேலுந் துக்கமு முண்டாகுமேழு
தரித்திடுபூர் சந்தனமு மனமுங்கொண்டு
தகுதியுள்ளோர் கூடிவர லாகுமெட்டே.

சித்தமிக மகிட்சியுண்டாம் நாலோர்டைந்து
தீதாக வேயுரைக்குந் தெரியும்பத்து
அத்தமிசை யாத்திரைக்கா ணுரேடைந்து
அதிகமகிட்சிக் கலியாண மாறேடாறு
புத்திவருங்காணிக்கை பதின்மூன்றிற்குப்
பறந்துவரு மிழவோலை பதினொன்குக்கு
மெத்தவரு முறவின்முறை யேழுமெட்டு
மென்மேலும் யோகமுண்டாம் பதினாறுக்கே.

---

## ஓணன் விழுதலுக்குப் பலன்.



மூக்கின் பேரில் வியாதி நிவாரணம், மூக்கு துவாரத்தின் பேரில் போஜன சௌக்கியம். மார்புமேலாவது புஜங்களின் பேரிலாவது விழுந்தால், ஆபரண லாபம். சிரசின்பேரில் பயம். வலது நெற்றியின் பேரில் தனம். காதின் பேரிலும் கண்ணின் பேரிலும் துக்கம். கையின்பேரில் ஆப்தர்களுக்கு பீடை. வயிற்றின்பேரில் சம்போக சௌக்கியம், பந்துதரிசனம். பட்டையின்பேரில்தனலாபம். தொடைகளின்பேரிலும் கால்களின்பேரிலும் வியாதி. இடது பக்கத்தில் எந்த அவயவத்தின் பேரிலும் தனம். வலதுபக்கத்தில் தரித்திரம். முகத்தில் கெடுதி. பாதங்களின் சந்துகளின் பேரில் லாபம். வலது பாதத்தின்பேரில் நல்லது. இடதுபாதத்தின்பேரில் கெடுதல்.



## நாய் சகுனம்.



செருப்பு துண்டை வாயில் கடித்துக்கொண்டு நாய் ஒருவனிடத்தில் வந்தால், காரியசித்தி. வாய்நிறையமாமிசத்தைக்கடித்துக் கொண்டு வந்தால், தனலாபம். பச்சை எலும்பாக கடித்துக் கொண்டு வந்தால் அதிர்ஷ்டம். எரிந்துகொண்டிருக்கிற கட்டையையாவது, உலர்ந்தபோன எலும்பையாவது கடித்துக்கொண்டு வந்தால் மரணம், ஆரிபோன கட்டையை கடித்துக்கொண்டு வந்தால் இதை பிராப்தமாகும். உலர்ந்துபோன எலும்பைகடித்துக் கொண்டு வீட்டில் பிரவேசித்தால் வீட்டு எஜமானனுக்கு கஸ்

டம், தந்தி கயிர் முதலானவைகளை கடித்துக்கொண்டு வந்தால் அவன் சிறையில் அகப்பட்டுக்கொள்ளுவான்.

பிரயாணம் செய்யும்போது நாய் வலது பக்கத்திலிருந்து இடது பக்கத்திற்கு போனால் நல்லது பிரயாணிக்கு நாய் எதிராகவருவது நல்லது. காதை யாட்டிக்கொண்டு பிரயாணியின் பேரில் ஏறப்போனாலும் அவன் பாதத்தை மிதித்தாலும், விக்கினங்கள் உண்டாகும். அவனைப் போகாமல் தடுத்தால், வழியில் திருடர்கள்அடிப்பார்கள், சத்துருக்களாவது தடுப்பார்கள். தேகத்தை கீரிக்கொண்டு காணப்பட்டால், வியாதிவரும். வாலைதூக்கிக் கொண்டு படுத்துக்கொண்டிருந்தால், கெடுதல் வந்துசேரும். நாய் பிரயாணிகள் காலை நக்கினால் அவன் பிரயாணம் நடுவழியில் நின்றுபோய்விடும். அதுவன்றியில் அவன் பிரயாணம்முடியாம லிருந்தால், உடனே முடிந்து காரியசித்தியாகும். பிரயாணிகள் ஒருவூரில் பிரவேசிக்கும்போது நாய் முறைத்துக்கொண்டு எதிரில் வந்தால், அந்தபிரயாணம் அவ்வளவோடு நின்றுபோய்விடும். நாய் ஒருவனுடைய பாதரக்ஷைகளை நக்கினால் அவனுக்கு உடனே பிரயாணம் நேரிடும். நாய் ஒருவன் இரண்டு தோள்களை முத்தாடினால், சத்துருக்களினாலும், திருடர்களாலும் பயம் உண்டாகும்.

நாய் களஞ்சியத்தின் பேரில் நின்றுகொண்டு நிலத்தை கீரிக்கொண்டிருந்தால் தானியம் விசேஷமாய் விளையும். நாய் வீட்டின் சுவரை கீரிக்கொண்டிருந்தால் திருடர்கள்பிரவேசிப்பார்கள்மாடு கொட்டாயில் குழிதோண்டினால், பசுக்களை திருடர்கள் ஓட்டிக் கொண்டுபோவார்கள். பசுக்களோடுஆடிக்கொண்டிருந்தால், தனதானிய விருத்தியும், சந்தான சுகாபிவிருத்தியும் உண்டாகும், எறிந்துவிட்ட குப்பையிலாவதுமாமிசத்திலாவது எலும்புகளிலேயாவது ஆகார பதார்த்தங்களிலேயாவதுபிரவேசித்தால், அக்கினி பயம். இரக்கம் உண்டாகும்படி கண்ணில் நீர் பெருகிக்கொண்டு கெட்டதிண்டியை சாப்பிட்டுக்கொண்டிருந்தால்வீட்டுக்காரருக்கு துக்கம் சித்திக்கும்.

நாய் வீட்டுவெளியில் நின்றுகொண்டு முகத்தை வீட்டுக்குள் வைத்து வீட்டு யஜமானனுடைய பாரியை பார்த்துமுறைந்தால் அந்த வீட்டு யஜமானனுக்கு வியாதிவரும். வீட்டிற்குள் நின்று தலை வெளியில்வைத்து, அவ்விதமாய் முறைந்தால்வீட்டுக்காரிக்கு மானபங்கம்.

கிராமமத்தியில் நின்று சூரியன்பக்கத்தைபார்த்துக்கொண்டு ஒரு நாயாவது அநேக நாய்களாவது முறைந்தால், தேசத்திற்கு கெடுதல். உதய காலத்தில் அப்படி முறைந்தால், அக்கினிபயம் சூரியாஸ்தமானகாலத்தில் அப்படி முறைந்தால், குடியானவர்களுக்கு கெடுதி. நடுராத்திரியில் வடக்குதிரும்பி முறைந்தால், பிராமணுளுக்கு கெடுதி, சோரபயம். ஒருநாய் கிரும மத்தியில் முதலில் முறைந்து அங்கிருந்து ஓடி, சுடுகாட்டில்முறைந்தால், கிராம பெரிதனக்காரனுக்காவது, அந்த கிராமத்தில் ஒரு பெரிய மனுஷனுக்காவது கண்டம். அநேக நாய்கள் சேர்ந்து ஊர்நடுவில் அதே வேலையாய் முறைந்தால், தேசரக்ஷகனுக்கு கெடுதல்.

மழை காலத்தில் சாணிகுப்பைமேலாவதுபெருக்கிபோட்ட குப்பையின் மேலாவது ராஜபவனத்திலாவது வீட்டுமெத்தைமேலாவது வீட்டு கூரையின்மேலாவது இருந்து நாய் உறத்து குலைத்தால், நல்லமழை பெய்யும். மற்றகாலத்தில் இப்படி குலைத்தால், நெருப்பினுலாவது ஒட்டு வியாதியினுலாவது ஜன நஷ்டம். மழை காலத்தில் மழை யில்லாம லிருக்கும்போது நாய் அடிக்கடி நீரில் முழுகிக்கொண்டாவது நீரைக் குடித்துக்கொண்டாவது அலைத்துக்கொண்டாவது காணப்பட்டால் சீக்கிரத்தில் மழைபெய்யும்.

## பூனை சகுனம்.

பூனை எதிரிலிருந்தால், தலைவைத்த காரியம் கெடும். நித்திரையை விட்டு ெழுந்தவுடனே எதிரில் காணப்பட்டால், அந்த தினத்தில் தான் செய்யும் காரியங்களெல்லாம் கெட்டுப்போய்விடும், வீட்டைவிட்டு போகும்போது எதிரில் வந்தால், தான்போன காரியம் விபலமாகும். தன்னுேடு கூட வெளியில் வந்தால், ஆபேக்ஷணையில்லாமல் காரியசித்தியாகும். மேற்கு பக்கத்திலிருந்து பூனை கத்துவது நல்லது.

## நரி சகுனம்.

பிரயாணிக்கு நரி இடதுபக்கத்திலிருந்து வலதுபக்கத்திற்குப்போனுல் நல்லது. நரி ஊளை கிழக்கிலும் வடக்கிலும் நல்லது. மத்தியானத்தில் நரி ஊளையிட்டால் பெரிய ஆபத்து உண்டா

கும். தென்பக்கமாயாவது சூரியன் பக்கத்தில் திரும்பியாவது நரி ஊளையிட்டால் பட்டணத்திற்கும் சேனைகளுக்கும் கெடுதல். நரி தென்பக்கத்திற்குத் திரும்பி மற்றொரு நரியின் ஊளைக்குப் பதிலாய் ஊளையிட்டால் தூக்கு போடப்படும். அப்படி மேற்கே திரும்பி கூப்பிட்டால் நீரில் விழுந்து சிலர் இறந்துபோவார்கள். ஒரு நரி செவிடாகும்படி கெட்டியாய் ஊளையிட்டு மற்றொன்றின் கூச்சலைக் கேட்டு தன் கண்டத்தொனியைக் குறைத்து ஊளையிட்டால் தனசம்பத்துகள் உண்டாகும். தூரதேசத்திற்குப் போயிருக்கும் பந்து மித்திரர்கள் சீக்கிரத்திலே க்ஷேமமாய் வந்து சேருவார்கள்.

---

## அவ்வத் தொனி.

எக்காரியத்தைப்பற்றியாவது யோசிக்கையிலாகிலும் அக்காரியத்தைச் செய்ய எத்தனிக்கையிலாகிலும் அஸ்வமென்ற குதிரையின் கண்டத்தொனி ஜெனித்தால் அது அக்காரியசித்தியாய் விடுமென்பதற்குறிய சூசகமாயிருக்கும்.

## மூஞ்சூறுத் தொனி.

யாதொரு தினத்தில் கிழக்கில் மூஞ்சூறு கண்டத்தொனி ஜெனிக்குமாகில் சத்துருவும், சச்சரவும், ஸ்தானப்பிரஷ்டமும் உண்டாகும். தென்கிழக்கிலாகில் சந்தோஷ பிறஸ்தாபமுண்டாகும். தெற்கிலாகில் அன்னிய ஸ்தலவாசமும், தனவிறயமும்உண்டாகும். தென்மேற்கிலாகில் மங்களபதார்த்தலாப முண்டாகும். மேற்கிலாகில் தூதருடைய சல்லாபமும், ஸ்திரீவரத்தும், லாபமுமுண்டாகும். வடமேற்கிலாகில் விருந்தாளிகளுக்கு உபசரணையுண்டாகும். வடக்கிலாகில் இன்பபோஜனமும், சுகமும், தேகஜாட்டியமு முண்டாகும். வடகிழக்கிலாகில் உற்சாகமுண்டாகும்.

---

## தும்மல்தொனி.

### நாயிற்றுக்கிழமை.

உதயாதி எ௨-நாழிகைக்குள் கிழக்கில் தும்மல்தொனி ஜெனித்தால் க்ஷேமமும், தென்கிழக்கிலானால் காரியதாட்சியும், தெ

ற்கிலானால் பந்துசம்பாஷணமும், தென்மேற்கிலானால் இஷ்டமித்திராள் வரத்தும், மேற்கிலானால் லாபமும், வடமேற்கிலானால் சுகபோஜனபிராப்தியும், வடக்கிலானால் பொருள்சித்தியும், வடகிழக்கிலானால் கன்னிகை வரத்துமுண்டாகும்.

எ௦-க்குமேல் யிரு-க்குள் கிழக்கில் அத்தொனி ஜெனித்தால் நல்ல வசனமும், தென்கிழக்கிலானால் காரியவிகாதமும், தெற்கிலானால் சுபமும், தென்மேற்கிலானால் வெட்கமும், மேற்கிலானால் நன்மையும், வடமேற்கிலானால் நஷ்டமும், வடக்கிலானால் சிநேகிதர் வரத்தும், வடகிழக்கிலானால் பந்துதரிசனமுமுண்டாகும்.

யிரு-க்குமேல் உஉ௭-க்குள் கிழக்கில் அத்தொனி ஜெனித்தால் மழையும், தென்கிழக்கிலானால் காரிய விக்கினமும், தெற்கிலானால் ஜெயமும், தென்மேற்கிலானால் தீங்கும், மேற்கிலானால் பொருள்சித்தியும், வடமேற்கிலானால் அசுபமும், வடக்கிலானால் சிநேகிதர் விஜயமும், வடகிழக்கிலானால் விறயமுமுண்டாகும்.

உஉ௭-க்குமேல் ௩ய-க்குள் கிழக்கில் அத்தொனி ஜெனித்தால் சுபமும், தென்கிழக்கிலானால் பிரயாணமும், தெற்கிலானால் காரியகுந்தகமும், தென்மேற்கிலானால் வியாசங்கமும், மேற்கிலானால் பந்துசல்லாபமும், வடமேற்கிலானால் அசுபமும், வடக்கிலானால் நஷ்டமும், வடகிழக்கிலானால் சிலவுமுண்டாகும்.

## திங்கட்கிழமை.

உதயாதி எ௭-நாழிகைக்குள் கிழக்கில் தும்மல்தொனி ஜெனித்தால் சுபமும், தென்கிழக்கிலானால் சிறுகும், தெற்கிலானால் நஷ்டத்திரவியலாபமும், தென்மேற்கிலானால் வியாகூலமும், மேற்கிலானால் சுகமும், வடமேற்கிலானால் அமங்களமும், வடக்கிலானால் நஷ்டமும், வடகிழக்கிலானால் பந்துவரத்துமுண்டாகும்.

எ௭-க்குமேல் யிரு-க்குள் கிழக்கில் அத்தொனி ஜெனித்தால் காரியலோபமும், தென்கிழக்கிலானால் சுகமும், தெற்கிலானால் கெடுதியும், தென்மேற்கிலானால் அடுத்தவர் வரத்தும், மேற்கிலானால் விறயமும், வடமேற்கிலானால் நல்ல வசனவிசிதமும், வடக்கிலானால் அசுபமும், வடகிழக்கிலானால் சிநேகிதர் வரத்துமுண்டாகும்.

யிரு-க்குமேல் உஉ௭-க்குள் கிழக்கில் அத்தொனி ஜெனித்தால் வெற்றியும், தென்கிழக்கிலானால் காரியகுந்தகமும், தெற்கிலானால் சுகமும், தென்மேற்கிலானால் கூடுதலும், மேற்கிலானால்

விறயமும், வடமேற்கிலானல்-நலமும், வடக்கிலானல்-லாபமும், வடகிழக்கிலானல்-அண்டியவர் வறத்துமுண்டாகும்.

உஉற க்கிமேல் ஙய க்குள் கிழக்கிலாவது அல்லது தென்கிழக்கிலாவது அத்தொனிஜெனித்தால்-அமங்களமும், தெற்கிலானல் ஜெயமும் தென்மேற்கிலானல்-சிலகும், மேற்கிலானல்-சுகமும், வடமேற்கிலானல்-நலமும், வடக்கிலானல்-அடுத்தவர் வறத்தும், வடகிழக்கிலானல் காரியசித்தியுமுண்டாகும்.

செவ்வாய்க்கிழமை.

உதயாதி எற நாழிகைக்குள் கிழக்கில் அத்தொனி ஜெனித்தால்-நலமும், தென்கிழக்கிலானல்-பிரதிகூலமும், தெற்கிலானல் ஸ்திரீ வருத்தும், தென்மேற்கிலானல்-தீங்கும்,மேற்கிலானல்-சுகமும், வடமேற்கிலானல்-அசுபமும், வடக்கிலானல்-லாபமும் வடகிழக்கிலானல்-நஷ்டமுமுண்டாகும்.

எற க்கி மேல் யறு க்குள் கிழக்கில் அத்தொனி ஜெனித்தால் அண்டியவர் வறத்தும், தென்கிழக்கிலானல்-ஜெயமும், தெற்கிலானல்-அபஜெயமும், தென்மேற்கிலானல்-ரெத்தக்குரியும், மேற்கிலானல்-விசேஷலாபமும், வடமேற்கிலானல்-விர்ஷ்டிலோபமும், வடக்கிலானல்-அண்டியவர் வறத்தும், வடகிழக்கிலானல்-கலதியுமுண்டாகும்.

யறு க்குமேல் உஉற க்குள் கிழக்கில் அத்தொனிஜெனித்தால் அமங்களமும், தென்கிழக்கிலானல் - ஜெயமும், தெற்கிலானல்-பெண்ஜெனிப்பும், தென்மேற்கிலானல் - விறயமும், மேற்கிலானல்-ஜெயமும், வடமேற்கிலானல்-நஷ்டமும், வடக்கிலானல்-அண்டியவர் வறத்தும், வடகிழக்கிலானல் ரெத்தகாயமுண்டாகும்.

உஉற க்கிமேல் ஙயக்குள் கிழக்கில் அத்தொனி ஜெனித்தால்-விறயமும், தென்கிழக்கிலானல்-நன்மையும், தெற்கிலானல் தீமையும், தென்மேற்கிலானல் - பெண்வறத்தும், மேற்கிலானல் நஷ்டமும், வடமேற்கிலானல்-மங்களமும், வடக்கிலானல்-அமங்களமும், வடகிழக்கிலானல் தீங்குமுண்டாகும்.

புதன்கிழமை.

உதயாதி எற நாழிகைக்குள் கிழக்கில்-தும்மல்தொனி, ஜெனித்தால்-நலமும், தென்கிழக்கிலானல்-இலாபமும், தெற்கு அ

ல்லது மேற்கிலானல்-சுபமும், தென்மேற்கு அல்லது வடக்கிலானல்-அமங்களமும், வடமேற்கிலானல்-ரோகமும், வடகிழக்கிலானல்-தீங்குமுண்டாகும்.

௪.௰ க்கிமேல் ௰௫ க்குள் கிழக்கில் அத்தொனி ஜெனித்தால் விறபமும், தென்கிழக்கிலானல்-நலமும், தெற்கிலானல்-ரெத்தகாயமும், தென்மேற்கிலானல்-நன்மையும், மேற்கிலானல்-திகிலும் வடமேற்கிலானல்-சாதகமும், வடக்கிலானல்-விர்ஷ்டிலோபமும், வடகிழக்கிலானல்-லாபமும் உண்டாகும்.

௰௫ க்குமேல் உ௰ க்குள் கிழக்கில் அத்தொனி ஜெனித்தால் அண்டியவர் வறத்தும், தென்கிழக்கிலானல்-தீங்கும், தெற்கிலானல் - நஷ்டத்திரவியலாபமும், தென்மேற்கிலானல் - நஷ்டமும், மேற்கிலானல்-சுபமும், வடமேற்கிலானல் - ரெத்தக்குரியும், வடக்கினல்-நன்மையும், வடகிழக்கிலானல்-சிலுகுமுண்டாகும்.

உ௰ க்கிமேல் ௩௰க்குள் கிழக்கிலாவது தென்கிழக்கிலாவது அத்தொனிஜெனித்தால்-அசுபமும், தெற்கிலானல்-ஆயாஸமும் தென்மேற்கிலானல்-சுகமும், மேற்கிலானல்-மழையும், வடமேற்கிலானல்-தேக உபாதியும், வடக்கிலானல்-அடுத்தவர் வறத்தும், வடகிழக்கிலானல்-பிரதிகூலமும் உண்டாகும்.

வியாழக்கிழமை.

உதயாதி ௭௰ நாழிகைக்குள் கிழக்கில் தும்மல் தொனிஜெனித்தால்-ஜாதகமும், தென்கிழக்கிலானல் - பாதகமும், தெற்கிலானல்-சினேகிதர்வறத்தும், தென்மேற்கிலானல்-விறபமும், மேற்கிலானல்-லாபமும், வடமேற்கிலானல்-அமங்களமும், வடக்கிலானல்-நல்லவசனமும்,வடகிழக்கிலானல்-அசுபமும்உண்டாகும்.

௭௰ க்கிமேல் ௰௫ க்குள் கிழக்கில் அத்தொனி ஜெனித்தால்-தீமையும், தென்கிழக்கிலானல்-நன்மையும், தெற்கிலானல்-அமங்களமும், தென்மேற்கிலானல் - கன்னிகைவறத்தும், மேற்கிலானல்-பாதகமும், வடமேற்கிதானல்-அண்டியவர் வறத்தும், வடக்கிலானல்-அசுபமும், வடகிழக்கிலானல்-நலமும் உண்டாகும்.

௰௫ க்குமேல் உ௰ க்குள் கிழக்கில் அத்தொனிஜெனித்தால் லாபமும், தென்கிழக்கிலானல்-அமங்களமும், தெற்கிலானல்-சுகமும், தென்மேற்கிலானல்-பாதகமும், மேற்கிலானல் - அண்டி-

யவர் வறத்தும், வடமேற்கிலானல்-நாடுசேர்க்கையும், வடக்கிலானல்-லாபமும், வடகிழக்கிலானல்-அசுபமும் உண்டாகும்.

உஉ ௲க்கி மேல் ௯ ௰க்குள் கிழக்கில் அத்தொனி ஜெனித்தால்-அசுபமும், தென்கிழக்கிலானல்-லாபமும், தெற்கிலானல்-நலமும், தென்மேற்கிலானல்-அமங்களமும், மேற்கிலானல்-அடுத்தவர் வறத்தும், வடமேற்கிலானல்-பாதகமும், வடக்கிலானல் கன்னிகை வறத்தும், வடகிழக்கிலானல்-லாபமும் உண்டாகும்.

வெள்ளிக்கிழமை,

உதயாதி எ௲ நாழிகைக்குள் கிழக்கில் தும்மல் தொனி ஜெனித்தால்-கன்னிகைவறத்தும், தென்கிழக்கிலானல் - நன்மையும், தெற்கு அல்லது தென்மேற்கிலானல்-அதிக பீதியும், மேற்கிலானல்-அடுத்தவர் வறத்தும், வடமேற்கிலானல் ஜெயமும், வடக்கிலானல்-விசேஷலாபமும், வடகிழக்கிலானல் காரியதாகூஷியுமுண்டாகும்.

எ௲ க்கி மேல் ௰௩ க்குள் கிழக்கில் அத்தொனி ஜெனித்தால் பாதகமும், தென்கிழக்கிலானல்-சாதகமும், தெற்கிலானல்-விறயமும், தென்மேற்கிலானல்-நன்மையும், மேற்கிலானல்-அடுத்தவர்வறத்தும், வடமேற்கிலானல்-சுகமும், வடக்கிலானல்-விர்ஷ்டியும், வடகிழக்கிலானல்-அமங்களமும் உண்டாகும்.

௰௩ க்கு மேல் உஉ௲ க்குள்கிழக்கில் அத்தொனிஜெனித்தால் நன்மையும், தென்கிழக்கிலானல்-ஜெயமும், தெற்கிலானல்-விறயமும், தென்மேற்கிலானல்-பீதியும், மேற்கிலானல்-சுகமும், வடமேற்கிலானல்-லாபமும், வடக்கு அல்லது வடகிழக்கிலானல்-நஷ்டமும் உண்டாகும்.

உஉ௲ க்கிமேல் ௯ ௰க்குள் கிழக்கில் அத்தொனி ஜெனித்தால் விறயமும், தென்கிழக்கிலானல்-சுகமும், தெற்கிலானல்-பாதகமும், தென்மேற்கிலானல்-அசுபமும், மேற்கிலானல்-விசேஷலாபமும், வடமேற்கிலானல்-விர்ஷ்டியும், வடக்கிலானல்-ரெத்தகாயமும், வடகிழக்கிலானல்-பெந்து வறத்துமுண்டாகும்.

சனிக்கிழமை.

உதயாதி எ௲ நாழிகைக்குள் கிழக்கில் தும்மல் தொனி ஜெனித்தால்-நலமும், தென்கிழக்கிலானல்-விறயமும், தெற்கிலானல்

அண்டியவர் வரத்தும், தென்மேற்கிலானல்-உத்தியோக பிறுப்த்தியும் மேற்கிலானல்-அமங்களமும், வடமேற்கிலானல்-நன்மையும், வடக்கிலானல்-சிநேகிதர் வரத்தும், வடகிழக்கிலானல்-மங்களமுமுண்டாகும்.

எ௦ க்கிமேல் ௰௫ க்குள் கிழக்கில் அத்தொனிஜெனித்தால்-நல்லவசனமும், தென்கிழக்கிலானல்-சுகமும், தெற்கிலானல்-சம்மந்தி வறத்தும், தென்மேற்கிலானல்-அசுபமும், மேற்கிலானல் வியாகூலமும், வடமேற்கிலானல்-நன்மையும், வடக்கிலானல்-அடுத்தவர் வறத்தும், வடகிழக்கிலானல்-விசேஷலாபமும் உண்டாகும்.

௰௫ க்குமேல் ௨௨௦ க்குள் கிழக்கில் அத்தொனி ஜெனித்தால்-நன்மையும், தென்கிழக்கிலானல்-சுகமும், தெற்கு அல்லது, தென்மேற்கிலானல் - விறயமும், மேற்கிலானல் - வியாகூலமும், வடமேற்கிலானல்-அடுத்தவர் வறத்தும், வடக்கிலானல்-சிநேகிதர் வறத்தும், வடகிழக்கிலானல்-கன்னிகை வறத்துமுண்டாகும்.

௨௨௦ க்கி மேல் ௬௰ க்குள் கிழக்கில் அத்தொனி ஜெனித்தால்-ஜெயமும், தென்கிழக்கிலானல்-தீங்கும், தெற்கிலானல்-பாதகமும். தென்மேற்கிலானல்-அடுத்தவர் வறத்தும், மேற்கிலானல்-அதிகலாபமும், வடமேற்கிலானல்-சம்பத்தும், வடக்கிலானல்-சந்தானமும், வடகிழக்கிலானல்-சுகமும் உண்டாகும்.

---

## பலதொனி மகத்துவம்.

வேறே இருவருக்குள் ஒருவருக்காக மற்றொருவருடைய வாக்கிலிருந்து ஜெனித்ததானது தைரியத்தை உண்டாக்கும்படியான உத்தம வசன தொனிகளாக யிருந்தாலும் அல்லது அதைரியத்தை உண்டாக்கும்படியான மத்திம வசனதொனிகளாகயிருந்தாலும் அத் தொனிகளுக்கு உபசுருதிகளென்று சாஸ்திரோக்தமாய் நாமகரணங்க ளேற்பட்டிருப்பதையிட்டு யாதொரு செய்கையைக்குறித்து ஆலோசிக்கையிலாவது அந்த செய்கையை நடத்துகையிலாவது அவ்விருவகுப்பு தொனிகளில் உத்தம வசன தொனி ஜெனித்தால் அது நன்மை நேரிடுமென்பதற்குரிய சூசக

மாயும் மத்திம வசன தொனி ஜெனித்தால் அது தீமை நேரிடு மென்பதற்குறிய சூசகமாயுமிருக்கும்.

அந்த சந்தர்ப்பத்துடன்கூட ஆகாயத்திலே திடுக்கென்று ஜெனிக்கும் பிரதம இடியினுடையவாவது அங்கிருந்து கீழில் விழும் இடியினுடையவாவது தொனியானது சந்திக்குமேயாகில் அதுவும் தீமை நேரிடுமென்பதற்குறிய சூசகமாயிருக்கும்.

அந்த சந்தர்ப்பத்தில் பெருங்காற்றினுடையவாவது சுழல் காற்றினுடையவாவது அகால விர்ஷ்டியினுடையவாவது தொனி ஜெனித்தால் அதுவும் தீமை நேரிடுமென்பதற்குறிய சூசகமாயிருக்கும்.

அந்த சந்தர்ப்பத்தில் வெகு கொடூரமும் லோகநிந்தையுமுள்ள அதமபட்சிகளாகிய கோட்டானுடையவாவது சாக்குருவியினுடையவாவது பொட்டை பிரூந்தினுடையவாவது தொனி ஜெனித்தால் அதுவும் தீமை நேரிடுமென்பதற்குறிய சூசகமாயிருக்கும்.

அந்த சந்தர்ப்பத்தில் யாதொருவரின் அபானவாயு பரிதலினுடையவாவது பன்றியின் உரும்பலினுடையவாவது தொனி ஜெனித்தால் அதுவும் தீமை நேரிடுமென்பதற்குறிய சூசகமாயிருக்கும்.

அந்த சந்தர்ப்பத்தில் ஸ்ரீ ராமாயண பாரத பாகவத முதலான யாதொரு திவ்விய புராணாதிகளின் உத்தம கெட்ட தாத்பரியத் தொனியாவது வேத தொனியாவது ஜெனிக்குமேயாகில் அது நன்மை நேரிடுமென்பதற்குறிய சூசகமாயிருக்கும்.

அந்த சந்தர்ப்பத்தில் யாதொரு கோவில் தேவதாராதனகாலத்தினுடையவாவது கிரக தேவதாராதனகாலத்தினுடையவாவது மணி தொனி ஜெனித்தால் அதுவும் நன்மை நேரிடுமென்பதற்குறிய சூசகமாயிருக்கும்.

அந்த சந்தர்ப்பத்தில் தேவஸ்தானம் நீதிசபை வித்தியாபோதகசாலை முதலான யாதொரு யிடத்திலிருந்து தேசிகால நிச்சிதார்த்தமாய் மணி தொனி ஜெனிக்குமேயாகில் அதுவும் நன்மை நேரிடுமென்பதற்குறிய சூசகமாயிருக்கும்.

அந்த சந்தர்ப்பத்தில் கறநாட்டகம் இந்துஸ்தான் இங்கிலீஷ் இம் மூன்றுவித மோஸ்தருக்குட்பட்ட யாதொரு வாத்தியத்தினுடையவாவது நடன நாட்டியமுதலிய சங்கீதத்தினுடையவாவது பீரங்கி முதலானதுகளின் அதிர்வெடிகளினுடையவாவது குதோகலார்த்த மங்கள தொனி செனித்தால் அதுவும் நன்மை நேரிடுமென்பதற்குறிய சூசகமாயிருக்கும்.





## கரிநாள் கவி.

இன்பமுறுமேடமதி லாறுபதி னைந்தாம்
ஏறதனி லேழுபதி னாறுபதி னேழாம்
அன்புமிகு மானியொன்று மாறலவன் ரெண்டோ
டையிரண்டு மைந்நான்கு மாவணியி ரண்டும்
ஒன்பதெழு நான்குகன்னி யுற்றபதி னாறோ
டொன்றெழு முப்பான் றுலையிலோ ராறுதேனில்
முன்சோம வாரமொன்று பத்துபதி னேழாம்
முனியாறு மொன்பதும் பன்னொன்று முதவாநாள்
உதவாத நாள்கலையி லொன்றிரண்டு மூன்று
மொருபதுட னொன்றுபதி னேழதுவுமாகா
துதிபெருகு மாசிபதினைந்து பதினாறும்
சொல்லுபதி னெழுகடை மாதமதி லாறும்
பதினைந்து மொன்றெழு மைந்நான்கு மிகுதீதாம்
பகர்ந்தமா தந்தோறுந் தெய்தியெனக் கொண்டு
கதிதருநற் பொதியைவரை முனிவனுரைத் திட்ட
கரிநாண்முப் பாநான்குங் கண்டறிகு வீரே.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சித்திரை | 6, 15உ | | ஐப்பசி | 9உ | |
| வைகாசி | 7, 16, 17உ | | கார்த்திகை | 1, 10, 11உ | |
| ஆனி | 1 6உ | | மார்கழி | 6, 9, 11உ | |
| ஆடி | 2, 10, 20உ | | தை | 1, 2, 3, 11, 17உ | |
| ஆவணி | 2, 9, 28உ | | மாசி | 15, 16, 17உ | |
| புரட்டாசி | 16, 29உ | | பங்குனி | 6, 15, 19உ | |

சிலர் கார்த்திகையில் முதற் சோமவாரம் நீக்கி ஐப்பசியில் 22உ யாக்கிக்கொள்வர்.

---

## இராகுகால புலர்பலன்.

அரியிருபத்தாறேகா லம்புவிமூன்றேமுக்கால்
எரிவண்ணனிருபதோடு மிரண்டரைபுதன்மூவைந்து
குருபதினெட்டேமுக்கால் குளிர்வெள்ளிபதினொன்றேகால்
கரியனேழரையிராகு காலமென்றறிந்துகொள்ளே.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஞாயிறு | மாலை | சஉ | மணிமுதல் | சூ | மணிவரையில் |
| திங்கள் | காலை | எ.உ | மணிமுதல் | கூ | மணிவரையில் |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| செவ்வாய் | மாலை | ௩ | மணிமுதல் | ௪½ | மணிவரையில் |
| புதன் | பகல் | ௧௨ | மணிமுதல் | ௧½ | மணிவரையில் |
| வியாழம் | பகல் | ௧½ | மணிமுதல் | ௩ | மணிவரையில் |
| வெள்ளி | காலை | ௰½ | மணிமுதல் | ௧௨ | மணிவரையில் |
| சனி | காலை | ௯ | மணிமுதல் | ௰½ | மணிவரையில் |

## குளிகைகால பலாபலன்.

ஞாயிறுமுகூர்த்தமேழாம் நன்மதிக்காறுஞ்செவ்வாய்க்
கேயவைந்தாகும்புந்திக் கிரண்டாம்பொன்மூன்றும்
தூயநற்புகர்க்கிரண்டாஞ் சன்னிஹுக்கொன்றதாகும்
ஆயவிம்முகூர்த்தத்தோடே யற்றிடுங்குளிகனெல்லில்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஞாயிறு | மாலை | ௩ | மணிமுதல் | ௪½ | மணிவரையில் |
| திங்கள் | காலை | ௧½ | மணிமுதல் | ௩ | மணிவரையில் |
| செவ்வாய் | பகல் | ௧௨ | மணிமுதல் | ௧½ | மணிவரையில் |
| புதன் | காலை | ௰ | மணிமுதல் | ௧௨ | மணிவரையில் |
| வியாழம் | காலை | ௯ | மணிமுதல் | ௰½ | மணிவரையில் |
| வெள்ளி | காலை | ௭½ | மணிமுதல் | ௭ | மணிவரையில் |
| சனி | காலை | ௬ | மணிமுதல் | ௭½ | மணிவரையில் |

## யோகினி நிலை.

| | | | |
|---|---|---|---|
| சுக்பிரதமை | சுக்கிலஏகாத | கி-சஷ்டி | கிழக்கு |
| துவிதியை | துவாதசி | சப்தமி | வடக்கு |
| திரிதியை | திரயோதசி | அஷ்டமி | தென்திக்கு |
| சதுர்த்தி | சதுர்த்தசி | நவமி | தென்மேற்கு |
| பஞ்சமி | பௌர்ணமி | தசமி | தெற்கு |
| சஷ்டி | கிஷ்ணபிரத | ஏகாதசி | மேற்கு |
| சப்தமி | துவிதியை | துவாதசி | வடமேற்கு |
| அஷ்டமி | திரிதியை | திரயோ | வடகிழக்கு |
| நவமி | சதுர்த்தி | சதுர்தசி | ஆகாயம் |
| தசமி | பஞ்சமி | அமாவாச | பூமி |

யோகினிக்கெதிரில்-மரணம், பக்கம்-ரோகம், பின்னேஜயம், ஆகாயம் பூமியிலிருக்க-மத்திபம், சூது வழக்கு யுத்தம் யாத்திரை இவற்றிற்குத் திதிவாரநாள் பிரதானமல்ல யோகினி பிரதானத.

## நிர்வாணி நிலை.

நாயிறு, வியாழந் - தென்கிழக்கு, திங்கள், வெள்ளி-தென் மேற்கு, செவ்வாய், சனி-வடமேற்கு, புதன்-வடகிழக்கு.

பிரயாணத்தில் பின்னானால் நன்று, முன்பக்கந்தீது, அவள் நிற்குந்திசையில் போகலாகாது.

## இருத்தை.

நாயிறு-பூமி, திங்கள்-காடு, செவ்வாய்-அனல், புதன்-நகரம், வியாழம்-மலை, வெள்ளி-கடல், சனி-தெருவிலும், சதுர்த்தி சஷ்டி அஷ்டமி நவமி துவாதசி சதுர்த்தசியிலும் நிற்கும்.

## ஆலயத்தில் தேங்காயுடைத்துப்பார்க்குஞ் சகுனம்.

ஒருகாரியந்துடங்கும்போதுவிநாயகருக்குமுன் பரிசுத்தமாகப் போய்த் தேங்காயுடைத்துச் சகுனம் பார்க்கவும்.

முடிசிறுத்து வட்டமிடிற் றிருவந்தெய்தும்
 மூன்றிலொரு பங்குடைந்தால் இனச்சந்தோஷம்
நெடியஜுந்தி லொன்றுடைந்தால் தொலையாச்செல்வம்
 நீணரும்பி னறுகோண நிதானவாழ்வு.
அடியதனால் பொடிதெரித்தால் இரத்னஞ்சேரும்
 அடித்துடைங்கி னிரண்டுசமன் கண்டபூசை
அடியவருக்கிடராறுக்கு மரன்றன்மைந்தன்
 ஐங்கரனார் முன்றேங்காய்ச் சகுனம்பாரே.
ஆணிமுடி தானிரண்டு கூறதானால்
 அக்கினியால் பொருளுக்குச் சேதமாகும்
பேணியதி லோடுடனே தெரித்து வீழ்ந்தால்
 பிணியாலே வாதையுண்டு பொருளுஞ் சேதம்
நீணியதோர் கண்தெரித்தால் மரணமாகும்
 நீளமதாய் பிளந்துவிட்டால் நிலைவிட்டோடும்
தனுவிலே தவறிவிடின் கும்பநாசம்
 தந்திமுகன் முன்தேங்காய்ச் சகுனம்பாரே.

## திதி அமிருதயோகம்.

நாயிறு-பிரதமை, சஷ்டி திங்கள்-துதியை, சப்தமி, செவ்வாய்-சதுர்த்தசி, புதன்-திரிதியை, அஷ்டமி, திரயோதசி, வியாழம்நவமி, வெள்ளி-ஏகாதசி, சனி-சதுர்த்தியும் அமிர்தயோகமாம்

## சுபதிதிகள்.

நாயிறு-அஷ்டமி, திங்கள்-நவமி, செவ்வாய்-சஷ்டி, புதன்-திரிதியை, வியாழம்-ஏகாதசி, வெள்ளி-திரயோதசி, சனி-சதுர்த்தசி.

☞ இந்த வாரங்களில்மேற்படி திதிகள் வரில் சுபமாம்.

## ஊர்த்துவமுகநக்ஷத்திரம்.

ரோகணி திருவாதி பூச உத்திர உத்திரா திருவோ அவிட் சதய உத்திரட்டாதி, இவைகளில் உப்பரிகை கொடிமரம் மதில் வாசற்படி வீதி யானை குதிரைக்கொட்டடம் பந்தல் பட்டாபிஷேகம் இவையாரம்பித்தல் சுபம்.

## அதோமுகநக்ஷத்திரம்.

பரணி, கிரு, ஆயி, மக, பூர, விசா, மூல, பூராட, பூரட் இவைகளில் குளம் கிணறு, புதையல் களஞ்சியம் வேலிசொக்கட்டான் கிரஹப்ரவேசம் கணிதம் ஆரம்பிக்க உத்தமம்.

## திருயம்முகநக்ஷத்திரம்.

அசு, மிரு, புன, அஸ்த, சித்தி, சுவா, அனு, கேட், ரேவதி, இவைகளில் யானை, குதிரை ஒட்டகம் எருமை கழுதை ரிஷபம் முதலிய நாலுகால்பிராணிகளைகிரயத்திற்குவாங்குதல்மேய்க்குதல் ஏற்றம் உழவு கால்வாய் வாசற்கால் தூண் முதலியன நாட்டுதல் இவைகள் ஆரம்பிக்க உத்தமம்.

## தானங்கள்.

பூச, கேட்டையில்-பசுவும், ஆயிலியத்தில்-குதிரையும், மூலத்தில்-மஹிஷமும் தானஞ்செய்யலாம்.

## மாதபலன்.

ஜன்மநட்சத்திரமுதல் மாதம்பிறந்த நக்ஷத்திரம் வரையில் எண்ணிக்கண்ட தொகையை ஏழிற்பெருக்கி எட்டிற்கழித்த சேடம்-1, ரோகம்-2, இலாபம்-3, செலவு-4, அலைச்சம்-5, போஜனசௌக்கியம்-6, ஐஸ்வரியம்-7, கலகம்-8, மிக கஷ்டம்.

## தினபலன்.

ஜன்மநக்ஷத்திரமுதல் அன்றையநட்சத்திரம் வரையில் எண்ணிக்கண்ட தொகையுடன் நாயிறுமுதல் அன்றையவாரம் வரையி

லும் பிரதமைமுதல் அன்றையத்திதிவரையிலும் கூட்டிக்கண்ட தொகையைச்சேர்த்து ஒன்பதிற் கழித்தமிச்சம்-1, வியாகூலம்-2, சுபம்-3, துர்வார்த்தை-4, பந்துதரிசனம்-5, பெண்போகம்-6, சுபம்-7, கலகம்-8, ரோகம்-9, ஞானவாக்கியம்.

## தாராபலன்.

ஜன்மநட்சத்திரமுதல் சந்திரனிருக்கிற நட்சத்திரம்வரையில் எண்ணிக்கொண்டு வந்த தொகையை, ஒன்பதிற் கழித்து நின்ற தொகை-1, ஜன்மம்-2, சம்பத்து-3, விபத்து-4, க்ஷேமம்-5, பிரத்தியக்கு-6, சாதனம்-7, வதை-8, சினேகம்-9, பரமசினேகம்.

## சந்திரபலன்.

ஜனனராசிமுதல் சந்திரனிருக்கிற ராசிவரையில் எண்ணின தொகையில்-1, தேகசவுக்கியம்-2, தனஹானி-3, திரவியலாபம்-4, ரோகப்பயம்-5, காரியவிக்கினம்-6, சத்துருநாசனம்-7, சவுக்கியவிருத்தி-8, ரோகவிருத்தி-9, காரியதாமதம்-10, உத்யோகவிருத்தி-11, இஷ்டார்த்த சித்தி-12, தனவிரயம். சிலர் சுக்கிலபட்சத்தில் 2-5-9-ம் கிருஷ்ணபட்சத்தில்-4-8-12-ம் உத்தமமென்பார்கள்.

## விவாகத்திற்கு.

மாதங்கள் க, உ, ரு, கய, கக, கஉ, கிழமைகள் புதன், வியாழம், வெள்ளி, திதிகள் உபயபக்ஷங்களில் துவி, திருதி, பஞ்சமி, ஸப்தமி, தசமி, சுக்லபக்ஷத்தில் திரசி, நக்ஷத்திரங்கள் ரோ, மிருக மகம், உத்திரம், ஹஸ், சுவா, அனு, மூல, உத்ரா, உத்திரட்டாதி ரேவதி. லக்கினங்களில் மே, ரிஷ, மிது, கட, சிங், கன்னி, துலாம் தனுசு, மீனம். கரணங்களில், பத்திரகரணம் தவிர, மற்றக்கரணங்கள் ஸப்தமசுத்தி இவை சுபம்.

---

சகல சுபமுகூர்த்தங்களுக்கும்

## தினசரி யோகடேபில்.

| நக்ஷத்திரம். | ஞாயி | திங். | செவ். | புத. | வியா. | வெள். | சனி. |
|---|---|---|---|---|---|---|---|
| அசுவனி | சித்த | சித்த | அ-சி | மரண | அமிர் | அமிர் | சித்த |
| பரணி | பிரப | சித்த | சித்த | சித்த | சித்த | சித்த | சித்த |
| கார்த்திகை | சித்த | மரண | சித்த | அமிர் | மரண | சித்த | அமிர் |
| ரோகணி | சித்த | அமிர் | அமிர் | சித்த | உத்தி | மரண | அமிர் |
| மிருகசிரிடம் | சித்த | அ-சி | சித்த | சித்த | மரண | சித்த | சித்த |
| திருவாதிரை | சித்த | சித்த | மரண | சித்த | மரண | சித்த | சித்த |
| புனர் | சித்த | அமிர் | சித்த | சித்த | அமிர் | சித்த | சித்த |
| பூசம் | சித்த | சித்த | சித்த | சித்த | அ-சி | உத்த | சித்த |
| ஆயிலியம் | சித்த | சித்த | சித்த | சித்த | சித்த | மரண | மர |
| மகம் | மரண | மரண | சித்த | சித்த | அமிர் | மரண | அமிர் |
| பூரம் | சித்த | சித்த | சித்த | அமிர் | சித்த | சித்த | சித்த |
| உத்தரம் | அமிர் | சித்த | அமிர் | அமிர் | மரண | சித்த | உத்த |
| அஸ்தம் | அ-சித் | சித்த | மரண | மரண | சித்த | அமிர் | மர |
| சித்தி | சித்த | பிரப | சித்த | சித்த | சித்த | சித்த | மர |
| சுவாதி | சித்த | அமிர் | சித்த | சித்த | அமிர் | சித்த | அமிர் |
| விசாகம் | உத்த | மரண | சித்த | சித்த | சித்த | சித்த | சித்த |
| அனுஷ்டம் | மரண | சித்த | அ-சி | அ-சி | சித்த | சித்த | சித்த |
| கேட்டை | மரண | சித்த | அ-சி | சித்த | பிரப | மரண | சித்த |
| மூலம் | அமிர் | சித்த | அமி | மரண | சித்த | அமிர் | சித்த |
| பூராடம் | சித்த | உத்தி | சித்த | அமிர் | சித்த | பிரப | சித்த |
| உத்திராடம் | அமிர் | மரண | பிரப | அமிர் | சித்த | சித்த | சித்த |
| திருவோண | அமிர் | அமிர் | சித்த | சித்த | சித்த | மரண | சித்த |
| அவிட்டம் | மரண | சித்த | சித்த | பிரப | சித்த | சித்த | சித்த |
| சதயம் | சித்த | சித்த | மர | சித்த | மரண | சித்த | அமி |
| பூரட்டாதி | சித்த | மரண | மர | அமிர் | சித்த | சித்த | மர |
| உத்தரட்டா | அமிர் | சித்த | அமி | சித்த | சித்த | சித்த | சித்த |
| ரேவதி | அமிர் | சித்த | சித்த | உத்தி | சித்த | அமி | பிரப |

அ—அமிர்தயோகம்.
சி—சித்தயோகம். } சுபம்.

உ—உத்பாதயோகம்.
பி—பிரபலாரிஷ்டயோகம்.
ம—மரணயோகம். } அசுபம்

தெய்வமேதுணை.

# இல்லறத்திற்குறிய

# சர்வமுகூர்த்தங்கள்.



## தேவர்களைவணங்கவேண்டிய விதி.

திரிமூர்த்திகளுக்குச் சிரசின்மேல் 12 - அங்குல முயர்த்திக் கைகூப்பிவணங்கவேண்டும். மற்றை தேவர்களுக்குச் சிரசின்மேற் கைகூப்பி வணங்கவேண்டும்.

குருவுக்கு நெற்றியில் கைகூப்பி வணங்குதல், அரசருக்கும் பிதாவுக்கும் வாய்க்குநேர் கைகூப்பி வணங்குதல், அந்தணருக்கு மார்புக்குநேர் கைகூப்பி வணங்குதல், தாய்க்கு வயிற்றில் கைகூப்பிவணங்கவேண்டும்.

## தண்டகாரமாய் வணங்கும் விதி.

மாதா பிதா குரு தெய்வங்களுக்கு மாத்திரம் அஷ்டாங்கமும் (8-அவயவமும் நிலத்திற்படும்படி வணங்குதல்) மற்றையோருக்குத் தண்டகாரங்கூடாது.

பெண்கள், முன் சொன்னவர்களுக்கும் முக்கியமாய்க்கணவனுக்கு ஐந்தங்கங்களும் பொருந்தும்படி வணங்கவேண்டும்.

## கிரகப்பிரவேசம்.

ஆனி, ஆடி, புரட்டாசி, மார்கழி, மாசி, பங்குனி, மாதங்களும், ஞாயிறு, செவ்வாய், வியாழமும், அசுவனி மிருகசீரிடம், புனர்பூசம், அஸ்தம், சித்திரை, சுவாதி, 3, உத்திரங்கள் அனு, திருவோணந்தவிர மற்ற நட்சத்திரங்களும், விருச்சிகம், கும்பமும் இருத்தையும் ஆகாவாம். அஷ்டசுத்தமுள்ள லக்கின முத்தமம்.

### வீட்டுமனை கோலுவதற்கும் குடிபுகுவதற்கும் உறிய மர்தபலன்.

ஆடித்திங்களில் ராவணன் பட்டதாம்
ஆனித்தே பெரும்பாரத மார்கழி

வீடித்தே புரட்டாசி யிரணியன்
வேதத்தோன் முடியற்றதும் பங்குனி
நாடியித்தேதியில் நன்மனைக் கேகிடில்
நாட்டில் மாந்தர்கள் நாசமடைகுவார்
ஓடித்தேசங் குடியேறிப் போனாலும்
ஒட்டிலே யிரந்துண்ணவு மாகுமே.

ஆடிமாதத்தில் இராவணன் பட்டதும், மார்கழி மாதத்தில் பாரதயுத்தமும், புரட்டாசி மாதத்தில் இரண்ணிய சம்மாரமும், பங்குனிமாதத்தில் பிரமதேவசிரசம்மாரமும், நடந்தேறியகொடிய மாதங்களாகையால் ஷை மாதங்களில் மனைகோலவும் வீடுவாங்கவும், குடிபோகவும் ஆகாதென்றறிக.

சித்திரைமீ வீடுகட்டினால் தனஹானி, வைகாசிமீ கட்டினால் ஜெயப்பிரதம், ஆனிமீ கட்டினால் மிருத்துவுபயம், ஆடிமீ கட்டினால் பசுக்கள் நஷ்டம்,ஆவணிமீ கட்டினால் பந்துவர்க்கம் வரவு, புரட்டாசிமீ கட்டினால் ரோகம், ஐப்பசிமீ கட்டினால் கலகம்,கார்த்திகைமீ கட்டினால்லட்சுமிவாசம், மார்கழிமீ கட்டினால் பயம்,தைமீ கட்டினால் அக்கினிபயம், மாசிமீ கட்டினால் பாக்கியமுண்டாகும், பங்குனிமீ கட்டினால் இரத்தினாபரணங்கள் நாசம்

இறந்தால் வீடு மூடவேண்டிய நட்சத்திரங்கள்.

அவிட்டம், சதயம், பூரட்டாதி, உத்திரட்டாதி, ரேவதி என்னும் பிதிர்பாகமாகிய தனிஷ்டாபஞ்சமிக்கு மீ 6, விகற்பபாகமாகிய ரோகணிக்குமீ 4, கார்த்திகை உத்திரத்திற்கு மீ 3, மிருகசீரிடம், சித்திரை புநர்பூசம் விசாகம், உத்திராடத்துக்கு மீ 2.

கருப்பாதானம்.

ஸ்திரீ ஸ்நானஞ்செய்த சுத்தமான 5-ம் நாள் முதல் 16-ம் நாளும் பூருவபக்கமும் ரோகிணி, உத்திரம், உத்திராடம், உத்திரட்டாதி, அஸ்தம், சுவாதி, அனுஷம், மூலம், திருவோணம் சதயம்-ரேவதியும் லக்கினம் 8-மிடஞ்சுத்தமும் உத்தமம், அசுவனி மிருகசீரிடம் புனர்பூசம் பூசம்-சித்திரை அவிட்டம் மத்திபம் ஞாயிறு செவ்வாய் சனிவாரமும், சதுர்த்தி அஷ்டமி, நவமி, சதுர்த்தசி,பூர்ண அமாவாசியும், பரணி-கார்த்திகை- திருவாதிரை-ஆயிலியம், மகம்-மும்பூரம் விசாகம் கேட்டையும்,மேஷம் விருச்சிகம்

மகரம் கும்பமும் ஜன்மநட்சத்திரமும் ஜன்மவாரமும் பகற்காலமும், ஸ்திரீ ருதுவாக முன்னும் மாதசூதகமானநாள் முதல்நாலு நாட்களும் மாதசூதகம் வராதகாலமும் நிஷேகத்துக்கு விலக்கப்பட்டன.

## சீமந்தம்.

4-6-8-என்னுமிரட்டித்த மாதங்களில் வளர்பிறையில் சுபர் வாரங்களில் அமாவாசை பூரணை-நவமி நீங்கிய ஒற்றை திதிகளில், ரோகணி மிருகசீரிடம் 3-உத்திரம் அஸ்த பூசம் முதலிய நக்ஷத்திரங்களில் சிங்கம் விருச்சிகம்நீங்கிய இராசிகளில் ஏறுபொழுதில் ஆகாசம் நிர்மலமாக இருக்கும்போது அஷ்டமசுத்தமான லக்கினத்தில் மாயோன் பலியாகிய சீமந்தஞ்செய்யலாம், பிராமணருக்கு மாத்திரம் 3-ம் மாதமுமாம்.

## நாமகரணஞ் செய்ய விதி.

பிராமணருக்குப் பிள்ளை பிறந்த 12-ந் நாளும்,க்ஷத்திரியருக்கு16-ந் நாளும்,வைசியருக்கு 21-ந் நாளும், சூத்திரருக்கு 31-ந் நாளும், நாமகரணஞ் செய்யவேண்டும்.இந்த நாட்கழித்தால் சுப தினங்களிலே ஸ்திரராசிகளுதயமாக லக்கினம் 5-மிடம் 8-மிடம் சுத்தமாகப் பூர்வான்னத்திலே நாமகரணஞ் செய்யவேண்டும்.

## அரைஞாண்கட்ட நாள்.

பிள்ளை பிறந்த 5-ந் நாள் பிள்ளையை சுத்தஜலத்தினுல்முழுக்காட்டி சுபகிரகங்களுதயமாகப் பஞ்சாயுதந் தரித்து பூதப்பிசாசுகளணுகாதபடி காவற்செய்து காப்புத்தரித்து அரைஞாண் கட்ட வேண்டியது.

பிள்ளை பிறந்த 360-ந் நாளில் ஸ்நானஞ்செய்வித்துப் புனர் யாகஞ்செய்து பொன் அரைஞாண் பூட்டுவதும் கோடிவஸ்திரந் தரிப்பது முத்தமமாம்.

## பால் குடிப்பித்தல்.

பிள்ளைபிறந்த 31-ந் நாள் சந்திரபகவானையும் பூமிதேவியையும் அர்ச்சனைப்பண்ணி சுபகிரகமுதயமாக பிள்ளைக்கு சங்கினுற் பால்குடிப்பிக்க வேண்டும்.

## தொட்டிலேற்றும் விதி.

பிள்ளை பிறந்த 10-ந் நாள் 12-ந் நாள் 16-ந் நாள் 32-ந் நாள் ஆதலால் சுபகிரக முதயமாக பஞ்சாங்கயோகம் நன்றாகவளர்த்துவ முக நட்சத்திரங்களிலே பிள்ளையைத் தொட்டிலிலேற்றவேண்டும்.

### காதுகுத்தும்விதி.

பிள்ளை பிறந்த 12, 16-ந் நாள்களும் 6-ம் 7-ம் மாதங்களும் சுபர்வாரங்களும் திருவோண நீங்கிய மற்ற முழு நட்சத்திரங்களும் பஞ்சமி, சஷ்டி, சப்தமி, துவாதசி, திரியோதசி மூற்பக்கச் சதுர்த்தியும் 2-3-7-9-11-ல் சந்திரனும் 3-11-ல்பாபகிரகங்களும் இருப்பது உத்தமம் குரு 6-8-10-லும் சுக்கிரன் 6-7-8-லும் புதன் 8-லும் இருக்கலாகாது.

### மயிர்கழிக்கவிதி.

ஆடி புரட்டாசி யைப்பிசி மார்கழி
தேடிய ஞாயிறு செவ்வாய் சனிதனில்
கூடியரோமங் குறைத்திட வல்லிரேல்
மாடுமக்களும் மைந்தருமாள்வரே.

பிள்ளைபிறந்த 3-லும் 5-லும் ஆடி, புரட்டாசி ஐப்பசி, மார்கழி, மாசி நீங்கிய மற்றமாதங்களும் ஞாயிறு, செவ்வாய், சனி வாரம் நீங்கிய மற்ற வாரங்களும் இருத்தை அஷ்டமி உவா பிரதமை நீங்கிய மற்றத் திதிகளும் அத்த சித்திரை சுவாதி உத்திராடம் திருவோணம்,அவிட்டம் சதயம், மிருகசீரிடம் புனர்பூசம், உத்திரட்டாதி, ரேவதி, அசுவனி, ரோகணி, நட்சத்திரங்களும், கன்னி, துலாம், ரிஷபம், மிதுனம், மீனம், கடகம், இராசிகளும், 9-மிடம் சுத்தமான லக்கினமு முத்தமம் சந்திரன் 1-6-12-லும்சுக்கிரன் 7-லும் குரு12-லும்,8-ல் எல்லாகிரகங்களும் இருக்கலாகாது 3-6-11-ல் பாபகிரகங்களிருக்கலாம் தாயாரிருந்தால் சுக்கிரவாரத்திலாகாது.

தூயபொன் வெள்ளிமுந்த கூணவயன மாசி
ஆயநற்பிறந்தநாட்க ளஷ்டமராசிகூறு
தாயகதிர்சனிசெவ்வாய்நாள் தொண்மணம்புணர்ந்தவான்
நாயகிகற்பநாளு நன்மயிர்கழிக்கொணுதே.



## வருந்தோஷங்கள்.

இரவியறு திங்களெண் டிங்கள் செவ்வாய்
பரவுசனி பன்னிரண்டு திங்கள்—கருதுமயிர்
பூதத்திலே விழுந்தாற் பொல்லாங் கெல்லாமருவும்
மாதவத்தோர் சொன்ன மறை.

## க்ஷௌரஞ் செய்துக்கொள்ள விதி.

திங்கள் புதன் வியாழம் வெள்ளியுந் துவிதியை திரிதியை பஞ்சமி ஸப்தமி தசமி ஏகாதசி துவாதசி திரயோதசியும் அசுவனி ரோகனி மிருகசீரிட புனர்பூச பூச உத்திர அந்த சித்திரை சுவாதி அனுஷமூல உத்திராட திருவோண அவிட் சதய உத்திரட்டாதி ரேவதி க்ஷௌரவஞ் செய்துக்கொள்ளலாம்.

மேற்கூறுத திதி வார நக்ஷத்திரங்களும் ஜன்ம நக்ஷத்திரங் களும்பகல் 12 மணிக்குமேலும் இராத்திரிகாலமும் விரத்தினம் சிரார்த்தினம் பிரயாணதினம் ஸ்நானம் போஜனம் புசித்தபின் னும் க்ஷௌரம் விலக்கப்பட்டது.

---

## வித்தியாரம்ப விதி.

பிள்ளை பிறந்த 5-வது வரு உத்ராயணத்தில் சனி செவ்வாய் தவிர மற்றவாரங்களில் பிரதமை யிருத்தை திரயோதசி அஷ்டமி உவா துவாதசி தவிர மற்ற திதிகளில் புருஷராசியில் அனுஷம் அசுவனி புனர்பூசம் பூசம் ஆதிரை திருவோணம் அவிட்டம் சதயம் அத்தம் சித்திரை சுவாதி மூன்றுத்திரங்கள் ரேவதி ரோகணி நக்ஷத்திரங்களில் 6, 7, 10, 12 நீங்கியவிடத்தில் சந்திரனும் 6-நீங்கியவிடத்தில் புதனும் 8 நீங்கியவிடத்தில் எல்லாக்கிரகங்களும் இருப்பதும், 4-ம் இடம் சுத்தமும் உத்தமம்.

## வித்தை ஓதாதகாலம்.

அஷ்டமியி லோதினு லாசானுக்காகாது
சிஷ்டருக்குப் பின்னுன்கு தீதாகும்—கெட்டவுவா
வித்தைக்கு நாசம் விளங்கு பிரதமையிற்
பித்தரும் பேசார் பிழை.

## ஓலை எழுதவரிகணக்கு.

அடியார்க் கிரண்டுவரி யன்பர்கரு மூன்றுங்
கொடுயோர்க்கு நான்காகக் கூறு—முடிபுனைந்த
வேந்தர்க்கோ ரைந்துவரி வேதியர்க்கோ ராறும்
சூழ்ந்தமனை யோளைச் சுருள்.

ஆவணிமீ திலும் புரட்டாசி மாதத்திலும் பூர்வபட்சத்தில் ஒருநற்றினத்தில் நூல்படிக்க ஆரம்பஞ் செய்தல்வேண்டும், தைமாதத்தில் மேற்கூறிய பூர்வபட்சம் நல்லநாளில் குற்றமில்லாமல் படித்து முடித்தல்வேண்டும், மறுபடியும் அடங்குதற்கரிய சுக்லபட்சத்தில் ஓதல்வேண்டும் வேதாங்கங்கள் முதலாகிய சாஸ்திரங்களை ஒருமிக்க சந்திரன் குறைகின்ற அமரபட்சத்தில் நூல் படித்தால் ஆகாது.

## உபநயனஞ்செய்யவிதி.

பிள்ளை பிறந்த 7-ம் வருஷம் சுபர்வாரங்களில் வளர்பிறையில் இருத்தை அஷ்டமி ஏகாஉவா பிரதமை நீங்கிய மற்றத் திதிகளும், அனுஷம் அத்தம் உத்திரங்கள் மூன்றும் மிருகசீரிடம் ரோகணி அசுவனி சித்திரை புனர்பூசம் பூசம் ரேவதி நட்சத்திரங்களும் பாபக்கிரகங்களில் ஆகூழிநீங்கிய 8-ம் இடம் சுத்தமாகிய லக்கினமும் உபநயனஞ் செய்ய உத்தமம்.

## கோடியுடுக்க கவி.

காரியிலழுக்கதாகும் கதிரவபிடைகாட்டும்
மாரியினனையுந்திங்கள் வன்புதன்கந்தையாகும்
வீரியமில்லைசெவ்வாய் வெள்ளியில்மடந்தைசேர்வள்
கூரியவியாழநன்றுங் குலவியவாடைசாத்த.

புதன் வியாழம் வெள்ளியும் உத்திரங்கள் மூன்றும் அசுவனி ரேவதி ரோகிணி புனர்பூசம் பூசம் அத்தம் சித்திரை சுவாதி விசாகம் அனுஷம் அவிட்டமும் ஆறுமிடம் சுத்தமும் இவைகள் உத்தமம் இருந்தையும் சரராசியும் ஆகாவாம்.

பரிதியிற்கடகம்கும்பம் பார்மதிமீனமேஷம்
குருதியிற்றனுசுகன்னி கோள்புதமிதுனமாகும்
சுருதிபென்னரியும்புல்லுஞ் சுக்கிரன்றுலாமுந்தேளு
மருசனிமகரமாகும் வாரத்திற்கோடிசாத்தே.

ஞாயிறு கடகம் கும்பம், திங்கள் மீனம் மேஷம், செவ்வாய் தனுசு கன்னி, புதன் மிதுனம், வியாழம் சிங்கம் இடபம், வெள்ளிக் கிழமை துலாம் விருக்சி, சனி மகரங்கூடிய காலத்திலும் கோடி தரிக்கலாம்.

## சயனிக்குந் திசைகள்.

கிழக்கு சிரசுவைத்துப் படுந்தால் ஐஸ்வரியம், தெற்கு ஆயுள் தனவிருத்தி மேற்கு பிரபலவிருத்தி, வடக்கு வியாதி மிருத்தியும்,

தானிருக்குமிடம் தெற்கும், மாமியார் வீட்டிற்கு கிழக்கும், யாத்திரைக்கு மேற்கும், சிரசுவைத்துப் படுக்கசுபம் எப்பொழுதும் வடக்கு வைக்கலாகாது,

## விழித்தவுடன் பார்க்கத்தக்கவைகள்.

தாமரைப்பூ பொன் தீபம் கண்ணாடி சூரியன் புகையாத நெருப்பு செஞ்சந்தனம் கறைவயல் சிவலிங்கம்மேகஞ்சூழ்ந்தமலை கன்றையுடையபசு வலக்கை மனைவி மத்தளம் பித்தன்காட்டானை கருங்குரங்கு ராஜா இவைகள் தரிசனம் சுகம்.

## தந்தசுத்தி.

ஆலன், வேலன் பல்லுக்குறுதி, இலவங்கத்தூள் இலைகொம்புவேர் இவைகளால் பல்விளக்கினால் பற்களுக்கு ஊனமில்லை வாத பித்தகபங்களால் பல்லினிடத்தும் அவ்வேரினிடத்தும் பிறக்கின்ற பலரோகங்களையும் கண்டிக்கும் ஆனால் மேற்கண்டவைகள் துவர் உள்ளவைகளாயிருந்தால் இறுதிகாலம்வரையில்பற்கள் உறுதியாயிருக்கும் கருவேல்குச்சி பற்களுக்குறுதி வேப்பங்குச்சி ஒளியும் நீர்புலாக்குச்சி வீரியவிருத்தியும். ஆலம்விழுது லட்சுமிகரமும், நாயுருவிவேர் முகவசிகரமுண்டாம்செங்கல்மா மணல்சாம்பல்கரி தென்னம் பாளை இவைகளால் பல் விளக்கக்கூடாது லட்சுமி யில்லாள், மூதேவி சேர்வள்.

## போஜனம் புசிக்குந் திக்கு.

ஆயுளை விரும்புகிறவன் கிழக்குமுகமாயும், கீர்த்தியைவிரும்புகிறவன் தெற்கு முகமாயும், சம்பத்தை விரும்புகிறவன் மேற்கு முகமாயும், சத்தியத்தை விரும்புகிறவன்வடக்குமுகமாயும் இருந்து புசிக்கவேண்டும்.

## விருந்துண்ணல்.

செவ்வாய்க்குப்பாலாந் தினகரற்குநெய்யாகும்
மெய்யாம் வியாழம்வெந்நீராகும்—ஐயாகேள்
இந்நா ளொருவிருந்தை யிட்டிடவேண்டிட்டால்
சொன்னோம் பரிகாரந் தான்.

வெள்ளிசனிதிங்கள் புந்தி விருந்துண்ண நன்றாகுங்
கள்ளவியாழங் கசப்பிக்கும்—எள்வளவும்
தீராப் பகையாகும் தினகரனிற் செவ்வாயில்
வாரப் பகையே வரும்.

திங்கள் புதன் வெள்ளி சனி நன்று, ஞாயிறு செவ்வாய் வியாழமானல் அற்பகையும் தீராப்பகையும் உட்பகையுமாயிருக்கும்

### தாம்பூலந்தரிக்கும் விதிகள்.

வெற்றிலைக்குமுன்னே வெறும்பிளவைவாயிலிட
நற்றிருவாமங்கை நடப்பளே—வெற்றிலையை
முன்னிட்டுப்பின்பிளவை மெல்குவரேயாமாயின்
மன்னரைப்போலாவார் மகிழ்ந்து.

ஒருபாக்கை புசிப்பதுசுகத்தையும் ஆரோக்கியத்தையும்தருவதாம், இரண்டு பாக்கை புசிப்பதினல் பலனில்லை, மூன்று சிரேஷ்டமாம், இதற்கு அதிகம் உத்தமமாமென்றும்வெற்றிலையின் அடியைப்புசித்தால்வியாதியும் நுனியால் பாபமும், சுண்ணும்புவைத்த வெற்றிலையால் ஆயுள்குறைவும், நடுவிலிருக்கும் நார்களால்புத்திராசமும் உண்டாகும், ஆகையால் இவைகளைத்தள்ளித் தாம்பூலத்தை அங்கிகரிக்க வேண்டுமென்று வசிட்டர் அருளிச்செய்தார்.

### முடிசூட்ட பாகைபோட.

வளர்பிறையில் சுபர்வாரங்களும் மிருகசிரிடம் ரோகணி அசுவனி உத்திரங்கள் மூன்றும் புனர்பூசம் பூசம் அத்தம் சித்திரை சுவாதி அனுஷம் அவிட்டம் ரேவதி நக்ஷத்திரங்களும் பஞ்சமி சப்தமி திரயோதசி துவாதசி திரித்திகை திதிகளும் கன்னி துலாம் நீக்கிய லக்கினத்திற்கு 11-மிடம் சுத்தமான லக்கினம் உத்தமம்,

### எண்ணெயிட நாள்.

ஞாயிறு அழகுபோம் திங்கள் பொருள் சேரும் செவ்வாய் ஆகாது புதன் வித்தைவிர்த்தி வியாழம் அறிவழியும் வெள்ளிபொருள் நஷ்டம் சனி சம்பத்துண்டாம்.

அருக்க னெண்ணெய் அழகழிக்கும்
ஆனதிங்கள் பொருள்சேரும்
திருக்காஞ் செவ்வா யுயிர்போக்குஞ்
செய்ய புதநற் புத்தியிண்டாம்
கருத்தை யழிக்குங் கவின்வியாழம்
கைப்பொருள் போக்குங் கனவெள்ளி
பெருக்க முண்டாஞ் சனியெண்ணெய்
பேணன் முழுகவல்லாரே.

### பரிகாரம்.

மேற்சொன்ன தீயநாட்களில் அவசியம் ஸ்நானம் செய்யநேரிட்டால் ஞாயிறு அலரி, செவ்வாய் மண், வியாழம் அருகு, வெள்ளி திருநீறு இவற்றை யெண்ணெயிலிட்டு முழுகவும்.

எண்ணெயிடலாகா வருங்கிழமைதன்னிலே
எண்ணெயிடவேண்டி யிருந்தாக்கால்விண்ணிலும்
ஞாயிறுபூ செவ்வாய்மண் நல்லவியா ழம்மருகு
நேயவெள்ளி நீறிடுகநேர்.

நித்திரையசனமெண்ணெய் நிறைமயிர்ச்சவரநான்கும்
உத்தமங்கிழக்குநன்று ஓங்குயிர்வளருந்தெற்குச்
சித்தமேகலங்குமேற்குத் திசைகேடுநாலுமூலை
அத்தமுமகமும்போக்கு மானதோர்வடக்குதானே.

நித்திரை, போஜனம், எண்ணெயிடல், க்ஷௌரம் இவைநான்கும் கிழக்கு உத்தமம், தெற்கு ஆயுள்விர்த்தி, மேற்கு மனவருத்தம் வடக்கு பொருளும் வீடு முதலானதும் போக்கும் மற்ற மூலைதிசைகள் கேடுதரும்.

### வியாபாரஞ் செய்தல்.

அசுவனி ரோகணி மிருகசீரிடம் திருவாதிரை புனர்பூசம் பூசம் உத்திராடம் திருவோணம் சதயம் உத்திரட்டாதி ரேவதி

யில் பிரதமை சதுர்த்தி அஷ்டமி நவமி பூரணை அமாவாசை நீங்கிய மற்றதிதியில் இடபம் மிதுனம் சிங்கம் துலாம் விருச்சிகம் மீனம் இவை உதயமாக திங்கள் புதன் வியாழம் வாரோதயங்களில் வியாபாரஞ் செய்யலாம்.

## மாடு முதலானவை கொள்ளுதல்.

அசுவனி ரோகிணி புனர்பூசம் பூசம் அஸ்தம் சுவாதி விசாகம் கேட்டை சதயம் ரேவதியுஞ் சதுர்த்தி அஷ்டமி நவமி சதுர்த்தசி அமாவாசை பூரணை நீங்கிய திதிகளுந் திங்கள் வியாழஞ் சனி வாரமும் மேஷம் மிதுனம் சிங்கம் கன்னி விருச்சிகம் தனுசு மகரம் மீனமும் மாடுமுதலானவை கொள்ள கொடுக்க நன்றும்.

இன்னும் அசுவனி உத்திரட்டாதியில் குதிரையும் பூராடம் உத்திராடம் சதயத்தில் யானையும் அத்தம் சுவாதியில் எருமையும் திருவாதிரையில் உழவுமாடு அத்தம் சுவாதி பூராடம் உத்திராடம் உத்திரட்டாதியில் பசுவும் கார்த்திகை பூசம் மேஷத்தில் ஆடும் கொள்ளல் உத்தமம்.

## வியாதியஸ்தர் மருந்துண்ணல்.

அசுவனி ரோகணி மிருகசீரிடம் புனர்பூசம் பூசம் உத்திர அத்தசித்திரை சுவாதி அனுஷ உத்திராட திருவோண அவிட்ட சதய உத்திரட்டாதி ரேவதியில் மேஷகர்க்கடக கன்னி துலா மகர உதயமாக 3 6 7 8ம் இடம் சுத்திபெற வியாதியஸ்தர் மருந்துண்ணல் உத்தமம் வெள்ளி வாரோதய அங்கிசமுஞ் சனிவாரமும் பூருவபக்கமும் இருத்தைகளும் விலக்கப்பட்டன 3 8ம் இடம் சுத்திபிரதானமாம் திருவாதிரை ஆயிலிய மூல கேட்டையுஞ் சதுர்த்தி நவமி சதுர்த்தசியும் ஞாயிறு செவ்வாய் சனி வாரோதயமும் புண்ணறுத்தல் சுடுதல் காரமிடுதல் அட்டைவிடுதல் முதலானவை செய்ய உத்தமம் ஜென்மத்திரயங்களுஞ் சந்திரோட்டமும் விலக்கப்பட்டன சடுதியான ரோகங் களுக்குக் காலநியமு மில்லையாம்.



# நட்சத்திர விபரங்கள்.

இன்ன நட்சத்திரத்தில் இன்னயின்ன காரியங்கள் நடத்தலா மென்று சகலருக்கும் சுலபமாய்விளங்குமாறு சோதிடநூல் முழு துமாராய்ந்தபெரியோர்களைக்கொண்டுஇயற்றப்பட்டதுஅதாவது அஸ்வனி முதல் ரேவதி வரையிலுமுள்ள 27 நட்சத்திரங்களிலும் சொல்லிய காரியங்களின் பிரகாரம் அந்தந்த நட்சத்திர தினங்க ளில் தாங்கள் தாங்களே தெரிந்துக்கொள்ளலாம்.

அசுவனி நட்சத்திரம்.

அசுவனியில் செய்யக்கூடியது பூமுடித்தல், கர்ப்பாதானம், விவாகம், அன்னபிராசனம், நாமகரணம், உபநயனம், குதிரைவாங் குதல், வேதசாஸ்திராப்பியாசம், நூதன ஆடையாபரணம் வாங்கு தல், பூணுதல், பட்டாபிஷேகம், நூதன வாகனம் ஏறுதல், கிரகா ரம்பம், சித்திரம், இரத்தினமிழைத்தல், பொன்னேருகட்டி விதை விதைக்க, தேங்கு, பலா, மா, முதலிய பலவிருட்சங்கள் வைக்க, யாகம்செய்ய, யாத்திரைசெய்ய, தேவதாபிரதிஷ்டை, கிரகப்பிர வேசம் இவைகள் செய்யலாம்.

பரணி நட்சத்திரம்.

பரணியில் செய்யக்கூடியது—மூலிகையை உபயோகிக்க, ஜல த்தில் படகு முதலாகியதுவிட தீர்த்தயாத்திரையில் திதிமுதலான து பாகசாலையில் அடுப்பட இதுகள்செய்யலாம்.

கார்த்திகை நட்சத்திரம்.

கார்த்திகையில் செய்யக்கூடியது—சுரங்கம்வெட்ட, ஓமாரம் பம்செய்ய, மடப்பள்ளி சமையல் முதலாகியதுகள் செய்ய, விருட் சங்கள்வெட்ட, கடன்நீக்க, வாசனைதிகள்விற்க, சைவாகமமுதலிய காரியத்திற்கு நன்று.

ரோகணி நட்சத்திரம்.

ரோகணியில் செய்யவேண்டிய—ருதுசாந்தி, பூமுடித்தல், ஸ்ரீ மந்தம், விஷ்ணுபலி நாமகரணம், விருந்துண்ணல்வுபநயனம், வித் தியாப்பியாசம், ஆலயஆரம்பம், விவாகம், ஆடையாபரணமணி

தல், பட்டாபிஷேகம், பல்லக்குயேறுதல், கிரகபிரவேசம், கிராமபிரவேசம், கும்பாபிஷேகம், யாகம், நவக்கிரகசாந்தி வியாபாராரம்பம், தானியங்களை இருப்புவைக்க, கிணர்வெட்ட, வாசக்கால் வைக்க, புஸ்தகங்கள் பத்திரிகைகள் பிரசுரஞ்செய்ய ஆகும்.

### மிருகசீட நட்சத்திரம்.

மிருகசீடத்தில்செய்யக்கூடியது—விவாகம்,ருது,பூமுடித்தல் ஸ்ரீமந்தம்,நாமகரணம்,முடிவாங்க,காதுகுத்த, அன்னப்பிராசனம் உபநயனம், வித்தியாரம்பம், ஆபரணம்பூணுதல், பட்டாபிஷேகம் வாகனம்வாங்க,மனைக்கோல்கிராமபிரவேசம், பொன்னேருகட்ட விதைவிதைக்க, யாத்திரைசெய்ய, தேவதாபிரதிஷ்டை கிரகப்பிரவேசம் இதுகள் செய்யலாம்.

### திருவாதிரை நட்சத்திரம்.

திருவாதிரையில் செய்யவேண்டிய—சூலக்கி நெருப்புவைக்க ஆயுத அப்பியாசம், மந்திரம்செபிக்க, சிவபூசை செய்ய நன்று.

### புனர் நட்சத்திரம்.

புனரில்செய்யவேண்டிய—பூமுடித்தல், ஸ்ரீமந்தம்,நாமகரணம், முடிவாங்க விருந்துண்ணல், காதுகுத்தல், உபநயனம், வித்தியாரம்பம், பட்டாபிஷேகம், அதிகாரம்பெருதல் வாஸ்து சாந்தி கிரகப்பிரவேசம், யாத்திரைவியாபார ஆரம்பம், பந்தக்கால் முகூர்த்தம், விவாகம், கோடிவஸ்திரம் தறித்தல், திருமங்கல்யத்திற்கு பொன் உருக்குதல், கிரகப்பிரவேசம் இதுகள் செய்யலாம்.

### பூச நட்சத்திரம்.

பூசத்தில்செய்யவேண்டியது—ருதுசாந்தி,பூமுடித்தல்,ஸ்ரீமந்தம், நாமகரணம்முடிவாங்க, விருந்துண்ணல், அன்னப்பிராசனம் வித்தியாரம்பம், சௌளோபநயனம், கர்ணபரணம்பூண, சாஸ்திராப்பியாசம், பசுவாங்க, விவசாயம்செய்ய, யாத்திரை, ஆலோசனை, சபைகூட, சிம்மாசனம்யேற,வாகனம்யேற, வாஸ்துசாந்திசெய்ய, விரதாரம்பம், குருவுபதேசம், நடனம், நாகவல்லி, கரும்புநட, யாத்திரைசெய்ய இதுகளுக்கு நன்று.

### ஆயில்ய நட்சத்திரம்.

ஆயிலியத்தில் செய்யக்கூடிய ஜெபம் பூர்த்திசெய்ய, நவக்கிரக சாந்திசெய்ய, ஆயுதங்கொள்ள, கிணற்றில் கற்கட்டடங்கட்ட இதுகள் செய்ய நன்று.

கசாந்திசெய்ய, ஆயுதங்கொள்ள, கிணற்றில் கல்கட்டடங்கட்ட இதுகள் செய்ய நன்று.

மகம் நட்சத்திரம்.

மகத்தில் செய்யக்கூடியது—விவாகம், மந்திரப்பிரயோகம், கசம் யெடுக்க நன்று.

பூர நட்சத்திரம்

பூரத்தில் செய்யக்கூடியது—சித்திரம்எழுத, ஆயுதம்பிரயோகம்செய்ய, கிரகபாதையை நிவர்த்திசெய்ய இதுகள் நல்லதாம்

உத்தர நட்சத்திரம்.

உத்தரத்தில் செய்யவேண்டியது—கர்ப்பாதானம்,பூமுடித்தல்சீமந்தம், நாமகரணம், அன்னப்பிராசனம், உபநயனம், விவாகம் காதுகுத்தல், வித்தியாரம்பம், க்ஷௌரம், வேதப்பியாசம், கோடிவஸ்திரம், ஆபரணம்பூண, கிரகப்பிரவேசம், விரைவிரைக்க, தேவதாபிரதிஷ்டை செய்ய இதுகளுக்கு நன்மை.

அஸ்த நட்சத்திரம்.

அஸ்தத்தில் செய்யவேண்டியது—ருதுசாந்தி, கர்ப்பாதானம்,பூமுடித்தல்-சீமந்தம்-நாமகரணம்-முடிவாங்கல் - விருந்துண்ணல்-உபநயனம் விவாகம்-காதுகுத்தல்-வித்தியாரம்பம்-சாஸ்திர அப்பியாசம்செய்ய-விரைவிரைக்க-வியாபார ஆரம்பம்-பொன்னேர் கட்ட-மந்திரம்செபிக்க- யாத்திரை-கும்பாபிஷேகம்கிணர்வெட்ட நந்தவனம்வைக்க-கிரகாரம்பம்-ராஜதரிசனம் கிரகப்பிரவேசம் இதுகள் செய்யலாம்.

சித்திரை நட்சத்திரம்.

சித்திரையில் செய்யவேண்டியது—கர்ப்பாதானம்பூமுடித்தல்நாமகரணம்,முடிவாங்கல் கர்ணாபரணம்,வித்தியாரம்பம், உபநயனம்,விவாகம்,வேதம்-சாஸ்திரஆரம்பம் வஸ்திராபரணம்கொள்ள குதிரைவாங்க,தீக்ஷாவைராக்கியம்கொள்ள,நாட்டியம் ஆரம்பிக்க அவுஷதம்செய்ய,தேவதா பிரதிஷ்டைசெய்ய,கிரகாரம்பம் கிரகப்பிரவேசம் இதுகள் செய்யலாம்.

சுவாதி நட்சத்திரம்.

சுவாதியில் செய்யவேண்டியது—கர்ப்பாதானம்,பூமுடித்தல் நாமகரணம்-முடிவாங்கல்அன்னப்பிராசனம்-க்ஷௌரம்-உபநயன

ம்வித்தியாரம்பம்-ஜோதிடம்-வைத்தியம்-சாஸ்திரம்ஆரம்பிக்க விவாகம்-சங்கீதம், வாகனம்வாங்க, விவசாயம், கும்பாபிஷேகம்செய்ய-கிரகப்பிரவேசம்-கோடியுடுத்தல் - புத்தகங்கள்-பத்திரிகைகள் பிரசித்தஞ்செய்ய இதுகள் நல்லதாம்.

விசாக நட்சத்திரம்.

விசாகத்தில் செய்யக்கூடியது—விவசாயத்தில் உற்பத்தியாகிய தானியங்களை அறுக்க கிணர் தடாகங்களை சீர்திருத்த நன்று.

அனுஷ்ட நட்சத்திரம்.

அனுஷ்டத்தில் செய்யக்கூடியது—ருதுசாந்தி பூமுடித்தல் நாமகரணம், காதுகுத்தல், உபநயனம், வித்தியாரம்பம், விவாகம், கோடியுடுத்தல், ஆபரணம்கொள்ளல், பட்டாபிஷேகம், வாகனமேற, கிரகாரம்பம்-கிரகப்பிரவேசம் வாசக்கால்வைக்க-தூண்நாட்ட-தூலம்-சரம்-முதலியதுயேத்த தானியம் இருப்புவைக்க-முகூர்த்தக்கால்நட பிரயாணம் சாஸ்திரப்பிரசுரம்செய்ய தேவதாபிரதிஷ்டை இதுகள்செய்ய உத்தமமாம்.

கேட்டை நட்சத்திரம்.

கேட்டையில்செய்யக்கூடியது—ஆபரணம்அழித்துச்செய்ய, குலைபோட விவாகம்துவக்க, ஆயுதத்தால் செய்யவேண்டியவேலைகள் ஆரம்பிக்க யந்திரம் செய்ய, சேவகாளைவைக்க, கடன்வாங்க வாகனம் மாற்ற இதுகள் செய்யலாம்.

மூல நட்சத்திரம்.

மூலத்தில் செய்யவேண்டியது—ருதுசாந்தி, பூமுடித்தல் சீமந்தம், பேரைமாத்திவைத்தல், விருந்துண்ணல், வித்தியாப்பியாசம் விவாகம், ஆபரணம்தரிக்க பாக்கியக்கிய தீக்ஷாரம்பம்செய்ய, ஆரோக்கியஸ்நானம் விதைவிதைக்க பலவிருட்சங்கள்வைக்க கிணர் வெட்ட மந்திரம்ஜெபிக்க இதுகள் செய்யலாம்.

பூராட நட்சத்திரம்.

பூராடத்தில் செய்யவேண்டியது—கணிதாரம்பம்,கரும்புநட முத்துபவழம்வாங்க, பழயகிணர்களை சீர்திருத்தல், அத்வைதவித்தியாரம்பம், சுரங்கத்திற்குள் நுழைய தீர்த்தஸ்ராத்தம் செய்ய கடன் விமோசனம் செய்ய இதுகள் உத்தமமாம்.

### உத்திராட நட்சத்திரம்.

உத்திராடத்தில் செய்யவேண்டியது—கர்ப்பாதானம், பூமுடித்தல், சீமந்தம், நாமகரணம், காதுகுத்தல், உபநயனம், விருந்துண்ணல், வித்தியாரப்பியாசம், விவாகம் கோடி ஆபரணம்பூண பட்டாபிஷேகம், கிராமங்களிலும் வீடுகளிலும் சங்குஸ்தாபனம் செய்ய தேவதாபிரதிஷ்டை இதுகள் செய்யலாம்.

### திருவோண நட்சத்திரம்.

திருவோணத்தில் செய்யவேண்டியது—ருதுசாந்தி பூமுடித்தல், சீமந்தம், விஷ்ணுபலி, நாமகரணம், அன்னப்பிராசனம், காதுகுத்தல், உபநயனம், விவாகம், வித்தியாரம்பம், ஆபரணம்தரிக்க, விஷ்ணு கும்பாபிஷேகம், கிரகாரம்பம், விரதாரம்பம், யாகம்கொட்டகைகட்ட, ஓமசாந்தி, மந்திராபியாசம்பொன்னேர்கட்டவிதை விதைக்க தீர்த்தஸ்நானம்.

### அவிட்ட நட்சத்திரம்.

அவிட்டத்தில் செய்யக்கூடியது—பூமுடித்தல், நாமகரணம், முடிவாங்க, காதுகுத்த, விருந்துண்ணல், ஆபரணம்பூண, உபநயனம், வித்தியாரம்பம், பட்டாபிஷேகம், வாகனம் யேறுதல், இஷ்டதேவதாபிரதிஷ்டை, கிரகப்பிரவேசம், யாத்திரை, சங்கீதாரம்பம் வியாபாரம் இதுகள் செய்ய நன்று.

### சதய நட்சத்திரம்.

சதயத்தில் செய்யக்கூடியது—கர்ப்பாதானம், பூமுடித்தல், நாமகரணம், முடிவாங்க, அன்னப்பிராசனம், உபநயனம்வித்தியாரம்பம், குதிரைவாங்க, தேவதாபிரதிஷ்டை வியாபாரம், கணக்குமுடிக்க, பூமிகொள்ள, கிரகம் வாங்க இதுகள் நன்று.

### பூரட்டாதி நட்சத்திரம்.

பூரட்டாதியில் செய்யக்கூடியது—கவலையேந்தம், முதலியது ஸ்தாபிக்க, மந்திரம் ஜெபிக்க, விவகாரம் முடிவுசெய்ய உத்தமம்.

### உத்திரட்டாதி நட்சத்திரம்.

உத்திரட்டாதியில் செய்யவேண்டியது—ருதுசாந்தி, பூமுடித்தல் ஸ்ரீமந்தம், நாமகரணம், முடிவாங்க, காதுகுத்த, விருந்துண்ணல், உபநயனம், விவாகம், யாத்திரை, வாகனம்யேறுதல், பட்டாபி

ஷேகம்,மந்திராநுஷ்டானம், சகலதேவதா உபாசனம், சகலவிரு க்ஷம்வைக்க, கோபுரஆலயாரம்பம், கிரகாரம்பம் இதுகள்நன்று.

## ரேவதி நட்சத்திரம்.

ரேவதியில் செய்யக்கூடியது—ருதுசாந்தி, பூமுடித்தல், நாம கரணம், முடிவாங்கல், காதுகுத்தல், அன்னப்பிராசனம், உபநய னம், விவாகம், சாஸ்திராபியாசம், கோடிவுடுத்தல் ஆபரணம்தரி த்தல், ராஜதரிசனம், விதைக்க, யாத்திரை, பிரயாணம்செய்ய, கும் பாபிஷேகம் இதுகள் செய்யலாம்.

மேற்சொன்ன சுபகாரியத்துக்குள் ஸ்ரீமந்தம், பூமுடித்தல் முதலியவைகள் சகல மாதங்களிலும் மற்றஉபநயனம், விவாகம் நிஷேகம், கிரகப்பிரவேசம், கும்பாபிஷேகம்முதலியவைகள் ஆடி புரட்டாசி, மார்கழி, மாசி, ஒழிந்தமற்றமாதங்களிலும், குரு,சுக் கிர அஸ்தமானத்தில், ஒருபட்சமும் செவ்வாய் சனிவாரங்களும் பலமாதமும் நேத்திர ஜீவமில்லாத நட்சத்திரங்களும் பூரணஅமா வாசை பிரதமை சதுர்த்தி அஷ்டமி நவமி சதுர்த்தசி திதிகளும் அசுபயோகங்களும் அசுபகரணங்களும் பாவரிருக்கும் நட்சத்தி ரங்களும் நீக்கி மற்ற சுபர்வார நட்சத்திர லக்கினங்களில் அவர வர்கள் சென்ம நட்சத்திரத்திற்காவது நாம நட்சத்திரத்திற்காவ து தாராபலம் சந்திரபலமுள்ள சுபதின முகூர்த்தங்களில் செய்ய நன்று.

சர்வபிரயாண

சகுன சாஸ்திரம்,

முற்றிற்று.



உ

கடவுள் துணை.

# சிவவாக்கியம்

## ஆயிரம்பாடல்.

---

சப்தரிஷிகளில் ஒருவராகிய பிருகுமகாரிஷியின் புதல்வரான (சிவவாக்கியர்) என்னும் யோகமூர்த்தியானவர் 400-வருடமளவும் சைவசமயத்தி லிருக்கையில் திருவாய்மலர்ந்தருளிய திருப்பாடல்களும் புரச்சமய கோளறுக்கு மாறு பலசமயத்தையும் கையாண்டு வருவாராகி வைணவசமயத்தை யனுஷ்டித்துத் (திருமழிசை யாழ்வார்) மென்னும் திருநாம முடையவராய் ஸ்ரீமந் நாராயணமூர்த்தியின் தோத்திரரூபமாய் திருவாய் மலர்ந்தருளிய வைணவசமயத் திருப்பாடல்களும் அச்சுக்குவராதிருந்த சில நூற்றுக்கணக்கான அனேக பாடல்களும் (சிவவாக்கியர்) அவதாரஞ்செய்த திவ்விய சரித்திரத்துடன் 1000, ஆயிரம்பாடல் ஒரே புத்தகமாய் உயர்ந்தகடிதத்தில் அச்சிட்டிருக்கின்றமையால் வேண்டிய புண்ணியவான்கள் அடியிற்கண்ட விலாசத்திற் கெழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

**இதன் விலை அணா 8. வி. பி. தபாற்கூலி அணா 3.**

---

உயர்ந்த கெடியார வகைராக்களும், இங்கிலாண்டு கெமிகல் கோள்டு டேமிர் வகைராக்களும், ரப்பர் ஸ்டாம்பு முத்திரைகளும், கஸ்தூரி, குங்குமப்பு, கோரோஜனம், பச்சைகற்பூரம், முதலியதுகளும் பூனாதேசத்து வாசனை எண்ணெகளும், உயர்ந்த பஸ்பங்கள் செந்தூரங்கள் முதலிய அவுஷத வகைராக்களும், தமிழ்பாஷையிலுள்ள எல்லாவித சாஸ்திரம், புராணம், கதைகள், விலாசங்கள், நாடகங்கள் முதலான புத்தகத் தினுசுகளும் ஜர்மன்சில்வர் நகைசாமான்களும் எம்மிடத்தில் விலை சரசமாய் விற்கிறபடியால் தேவையானவர்கள் பெற்றுக்கொள்ளலாம். (அல்லது எங்கள் சாமான்களின் விபரம் அடங்கிய விக்கிரயஜாப்தா புத்தகம் அச்சிட்டிருக்கிறபடியால், தமது விலாசத்தைமட்டும் தெரிவித்தல் ஒரு கேட்ளாக்கு புத்தகம் அனுப்புகிறோம்.

இப்படிக்கு,

சிறுமணவூர்-முனிசாமி முதலியார்,

பேரம்பூர் போஸ்டு, மதராஸ்.